உ



கடவுள் துணை.

வித்வசிரோன்மணியாகிய

# புகழேந்திப்புலவர்

திருவாய்மலர்ந்தருளிய

# புலந்திரன் களவுமாலை.

இஃது-மயிலம்.

சுப்பிரமணிய சுவாமிகளால்

பார்வையிடப்பட்டு.

சென்னை-இட்டா

பார்த்தசாரதிநாயுடு

அவர்களது

ஸ்ரீபத்மநாபவிலாச அச்சுக்கூடத்திற்

பதிப்பிக்கப்பட்டது.

1904.

சென்னை - ஆசாரப்பன் தெரு, 84-வது, நே.

உ

கடவுள் துணை.

# புலந்திரன் களவுமாலை.

## விநாயகர் துதி.

அத்திமுகத்தோனே அரனார்திருமகனே
சத்திக்கணபதியே சங்கரனார்திருமகனே
பானைவயிற்றோனே பழமேந்துங்கையோனே
ஆனைமுகத்தோனே ஐங்கரனேமுன்னடவாய்
வேலவர்க்குமுன்பிறந்த வித்தைக்களஞ்சியமே
மூலமுதலேமுன்னடக்கவேண்டுமையா

## சரஸ்வதிதுணை.

நாவிற்சரஸ்வதியே நான்முகனார்தேவியரே
சதுர்முகனார்தேவியரே தாயேசரஸ்வதியே
வாக்குவரமருள்வாய் மறையவனார்தேவியரே
நாவுதவறாமல் நற்கருத்தைத்தாருமம்மா
இந்தக்கதைதனக்கு இனிக்கருத்தைத்தாருமம்மா
பூவிலமர்ந்தமொரு பொற்கொடியேநான்சரணம்
சரணமென்றடிபணிந்தேன் தற்காக்கவேண்டுமம்மா
தப்புகளுண்டாயில் தாயேயருள்புரிவாய்
குற்றமிருந்தாலும் கொண்டணைக்கவேண்டுமம்மா
புலந்திரனார்கதையுரைக்கப் புத்திவரமருளும்

## பாண்டியன்பெருமை

பட்டணமாம்பட்டணமாம் மதுராபுரிபட்டணமாம்
பட்டணத்தையாளுகிற பாண்டியராசாக்கள்
மதுரைப்பதிதனிலே மன்னர்கள்ராசாக்கள்
நீதிமனுமுறைகள் நெறிதவறாப்பாண்டியர்கள்
ஆறிலொருகடமை அரசர்கள்வாங்குவது
சொக்கர்வலுமையுண்டு துரைராசபாண்டியர்கள்
மீனாட்சிவலுமையினால் மேன்மையுடனாண்டிருந்தார்
சக்கரநெறிப்படியே தானிதனையாண்டிருந்தார்

## அல்லிஅரசாணிஉற்பத்தி.

இப்படியாகவே இருக்கின்றநாளையிலே
ஆறுயிரவர்களும் அணிதிரளாம்பாண்டியர்கள்
பிள்ளையைவேண்டியே பெருந்தவசுதானிருந்தார்
மைந்தனை வேண்டியே மாதவசுதானிருந்தார்

சோலைமலருடைய சொக்கனைநோக்கியேதான்
கால்கள்நடுங்கத்தான் கடுந்தவசுதானிருந்தார்
சங்கரருமப்போது தயவாய்மனமிறங்கி
அங்கையர்கண்மீனாட்சி அருளுமிரங்கியேதான்
சந்திரர்கள்சூரியர்கள் சந்திபண்ணும்பொய்கையிலே
செவ்வலரிப்பூவிலே செல்வம்பிறந்ததுகாண்
அல்லிமலரிலே அவதரித்தாள்பெண்பெருமாள்
குழந்தையைப்பார்க்கவே கொற்றவர்கள்ராஜாக்கள்
கண்டுமனமகிழ்ந்தார் காவலர்கள்ராசாக்கள்
பார்த்துமனமகிழ்ந்தார் பாண்டியராஜாக்கள்
கண்டெடுத்துக்கொண்டுவந்தார் காவலர்கள்ராஜாக்கள்
வைத்துவளர்த்தெடுத்து மரிவுள்ளபெண்கொடிக்கு
அல்லியரசாணியென்று அரசியற்குப்பெயருமிட்டு
நாளொருவர்ணமும் பொழுதொருமேனியுமாய்
வைத்துவளர்த்தார்கள் வண்டார்கருங்குழலை

## அல்லியரசாணி பராக்கிரமம்.

ஏழுவயதாச்சு இளங்கொடியாள்நாயகிக்கு
பாதிஅரசு பகுத்தொண்டநீன்முகனை
முடிகிவந்தநீன்முகனை முந்திமயிர்பிடித்து
குடலைப்பிடுங்கியேதான் கொம்பனையும்மாலையிட்டு
பெண்ணரசுபட்டங்கட்டி பெருக்கமுடன்வாழ்ந்திருந்தாள்
ஆண்காற்றடித்தாலே அதம்பண்ணிப்போட்டிடுவாள்
கண்டவரைக்குத்தியே கழுவிலேஏற்றிடுவாள்
எண்ணவொண்ணாச்சேனையுடன் எடுத்தாளேமந்திரவாள்
மந்திரவாளெடுத்து மதயானைபோலெழுந்து
எதிர்க்கத்தான்கண்டவனை பெண்ணியேபாராமல்
கண்டமுனிராட்சதனைக் கண்டதுண்டமாக்கிடுவாள்
வடமதுரைக்கன்னாடு வடதேசபட்டணமும்
ஈழகலிங்கதேசம் இனமுள்ளபட்டணமும்
முத்துகப்பலாயிரமும் முளகுகப்பலாயிரமாம்
பாக்குபடுத்துமையும் பாண்டிவளநாடும்
இத்தனைநாடுகளும் இடமுள்ளராட்சியமும்
பட்டணமுங்கட்டியிவள் பாருலகையாண்டிருந்தாள்
பத்துவயதாச்சு பைங்கொடியல்லியற்கு
வளர்ந்துசமைந்தார்காண் மாதுருதுவானாள்

## ஸ்ரீகிருஷ்ணர் அல்லியை அர்ச்சுனற்கு பாரியாளாக நினைத்தது.

ஏழுலகையாண்டதொரு எம்பெருமாள்தான்பார்த்து
அல்லிமலரிலவதரித்தபெண்பெருமாள்
அழகில்மிகுந்ததொரு அல்லிபரசாணியை
தக்கப்புகழுடைய தருமராதுதம்பியை
காண்டாவனமெரித்த காளையந்தஅருச்சுனற்கு

ஆணழகருக்கும் அல்லியரசாணியர்க்கும்
அவர்களழகுக்கும் ஏற்குங்காண்வையகத்தில்
என்றுசொல்லிமாயவனார் இயலாகதானினைத்து
சோலைமலருடைய சொக்கரும்மாயவரும்
அருளால்மிகுந்தொரு அங்கையற்கண்ணுமையுடன்
தேவாதிதேவருடன் தென்மதுரைவந்துநின்று
அடங்கலுந்தானழைத்து ஆருயிரவருமாம்
பெண்கேட்கவந்தோங்காண் பேருலகில்ராஜாவே
பெண்ணாய்ப்பிறந்தாலும் பிழையில்லாப்பெண்பெருமாள்
நீன்முகனைக்கொன்று நீலியிட்டபெண்பெருமாள்
கூடியவர்தானினைந்து கொம்பனையைக்கொள்ளுதற்கு
மதுரைப்பதியாளும் மன்னவர்கள்பாண்டியரே
மணக்கோலம்வந்தோங்காண் மன்னவரேயிப்பொழுது
என்றுஇவருரைக்க இராசமன்னரேயிப்பொழுது
ஆருயிரவர்களும் ஐயன்மாரேதுசொல்வார்
மந்திரவாளோடே மயிலனையாள்தான்பிறந்தாள்
கண்டவரைக்கொண்டு கழுவிலேயேற்றிவைப்பாள்
அண்டாப்பெருநீலி ஆர்சொல்லுங்கேளாளே
அப்படிக்கொத்தவளை அண்டப்பயப்படுவோம்
அவளுக்குவற்றவர்தான் அருச்சுனரேயாகுமென்றார்
ஆண்காற்றடித்தால் அதம்பண்ணிப்போட்டிடுவாள்
உங்களாலானபடி உத்தமரேபாருமென்றான்

அருச்சுனன்பாம்பாகவும் பெருமாள்பிடாரனாகவருதல்.

ஏழுலகையாண்ட யெம்பெருமாள்தான்கேட்டு
என்னாலேயாகுமென்று எழுந்திருந்தாரெம்பெருமாள்
காண்டாவனமெரித்த காளையென்னுமருச்சுனனை
ஐந்துதலைநாகம்போல் அடைவாய்வடிவாக
மண்ணுளிப்பாம்பு வகையானசர்ப்பமுடன்
புண்ணியமூர்த்தி பிடாரனைப்போல்வேஷங்கொண்டு
வேஷம்உருவெடுத்து வேறேயுருமாறி
அரசாளும்நாயகியாள் அல்லியிடப்பட்டணத்தில்
தண்ணீர்குளத்தருகே தார்வேந்தர்வந்துநின்று
பொற்பாம்புதன்னைவிட்டுப்பெருமாளும்ஆட்டிவைத்தார்
ஆயக்குழலூதி ஆயனுமாட்டிவைத்தார்
பாடாதசிந்துகவி பாடினார்மாயவரும்
அரசாளும்நாயகியாள் அல்லியிடத்தாதியர்கள்
பூங்காவனத்திலே பொய்கையருகாக
மாயன்பெருமாளும்பகாமயக்கந்தான்செய்து
மகடிக்குழலூதி மன்னவரும்ஆட்டிவைத்தார்
ஆட்டினார்நாகமும் ஆடுதுகாண் அந்நேரம்
ட்டுக்கிசைவாகப்பாம்புகளாடுதுகாண்

சோலைநீர்குடமெடுத்துத் தலைமேற்சுமந்தவர்கள்
கால்கடும்பாவனையை பைங்கிளிமார் தான்பார்த்து
சங்கராளும்நாயகியாள் அல்லியரைத்தெண்டனிட்டு
அங்கை
சந்தி மதுரைவளநாட்டில் வந்ததேநற்பாம்பு
சொணீர்குளத்திலே தார்குழலேபாடுதென்றார்
ஆம்பாடும்பாவனையைப் பட்டணத்தில்கண்டதில்லை
அந்தஅழகும் அதிசயமுங்கண்டறியோம்
என்றுஅவளுரைக்கவே திழையுந்தான்கேட்டு
அப்படிப்பட்டதொரு அழகுள்ளநற்பாம்பை
இங்கேயழையுமென்றாள் ஏந்திழையாளல்லியரும்
அப்படியேபோக அழைத்துவந்துவிட்டார்கள்
பாம்பைதிறந்துவிட்டார் பார்வேந்தர்மாயவரும்
மகுடிக்குழலூதி மாயவனாடினின்றார்
பாம்பாடும்பாவனையைப் பைங்கிளியுந்தான்பார்த்து
மன்னன்மேல்சிந்தையுமாய் மயங்கினாள்மங்கையரும்
மாயவனைத்தான்பார்த்து மயிலனையாளல்லியம்மாள்
பாம்பையனுப்புமென்றாள் பைங்கொடியுந்தன்னருகே
அப்படியேநற்பாம்பு அவளருகேவந்ததுகாண்
பாம்புமடியேறப் பைங்கிளியும்பார்த்திருந்தாள்
முன்னழகும்பின்னழகும் முதுகில்மட்சரேகைகளும்
அரசாளும்நாயகியாள் அல்லியரும்பார்த்தாள்
காண்டாவனமெரித்த காளையருச்சுனரும்
சொக்குப்பொடிபோட்டார் தேன்மொழியாளல்லியற்கு
மாதுசவுரியம்போய் மயங்கினாளருச்சுனன்மேல்
மயங்கியெழுந்திருந்து மாயவரைத்தான்பார்த்து
பாம்பைபடையுமென்றாள் பைங்கொடியாளல்லியரும்
அந்தப்பிடாரன் அடைவாகப்போனபின்பு
அரசாளும்நாயகியாள் அல்லியருந்தான்பார்த்து
ஆறாயிரவரென்னும் அணிதிரளாம்பாண்டியர்கள்
தந்தையார்சீர்பாதந் தையலடிபணிந்து
தக்கப்புகழுடைய தருமரிடதம்பியரை
காண்டாவனமெரித்த காளையெனுமருச்சுனரே
இந்தட்சணமே இயலாளழையுங்கள்
கலியாணங்கூட்டுமென்றாள் காரிழையல்லியரும்
ஆறாயிரவர் அணிதிரளாம்பாண்டியர்கள்
வற்றிக்கிடந்த வருள்பெரியகாவேரி
முட்டப்பெருகியே கரைபுரண்டுவந்தாற்போல்
திரேகங்குளிர்ந்தாரே இருதோளும்பூரித்து
தக்கப்புகழுடைய தருமர்தனஞ்சயர்க்கு
எழுதினார்பாண்டியர்கள் இன்பமாயோலைதன்னை
காண்டாவனமெரித்த காளையந்தஅருச்சுனர்க்கும்

அரசாளும்நாயகியாள் அல்லிமலர்நாயகிக்கும்
சித்திரைமாதத்திலே சீர்பத்தாந்தேதியிலே
சுக்கிரவாரமது தசமிபுனர்பூசம்
அன்றையவேளையிலே அர்ச்சுனர்க்கும்அல்லியற்கும்
கலியாணம்கலியாணம் காரிழைக்குகலியாணம்
கலியாணமென்றுசொல்லி கனமானவோலையப்போ
இட்டோம்முகூர்த்தமென்று எழுதினாரோலையிலே
ஓலைகண்டநாழிகைக்கு உத்தமரேவாருமென்றார்

கலியாணம்.

என்றிருக்குமோலைதன்னை இராஜாக்கள்தான்பார்த்து
ஐவர்பஞ்சபாண்டவர் அனைவோருந்தான்பார்த்து
தக்கப்புகழுடைய தருமரவரேதுசொல்வார்
இதுநல்லகாரியங்கள் என்றுமனதிலெண்ணி
சரிபொத்தசம்பந்தம் ஆரென்றுதார்வேந்தர்
மதுராபுரிதனக்கு மன்னவர்கள்பயணமானார்
துரௌபதைநாககன்னி சுபத்திரையும்பயணமானார்
மந்தாரக்குந்தியம்மாள் மாதாவும்பயணமானார்
வந்துஇரங்கினார் மதுரைபதிதனிலே
அரனார்திருவுளத்தால் அர்ச்சுனர்க்கும்அல்லியர்க்கும்
செய்யுஞ்சடங்குவகை செய்தார்கள்வேதியர்கள்
மங்கிலியந்தானெடுத்து வாள்விசையன்தான்றரித்தான்
மாதுகழுத்திலே மங்கிலியம்சாற்றினபின்
கூடியிருந்தார்கள் குங்குமக்கட்டிலின்மேல்
அருச்சுனரும்அல்லியரும் அமர்ந்திருந்தாரந்நேரம்

புலநதிரனுற்பத்தி

அப்படியாகவேதான் அநேகநாட்சென்றபின்பு
பாலகனுண்டானான் பைங்கிளியாளல்லியற்கு
பத்துமாதமுஞ்சென்று பைங்கொடியாளல்லியரும்
பெற்றாள்புலந்திரனை பேருமிட்டாளல்லியரும்
வளர்த்தாள்புலந்திரனை வைத்திருந்தாளல்லியரும்

புலந்திரனுக்குகலியாணம்.

ஐந்துபிராயமது அடைவாய்வளர்ந்தபின்பு
தேசத்தழகுமன்னன் திரியோதிரன்தங்கை
துன்னுங்கருங்குழலாள் துற்சடையாள்தன்மகளை
அந்தக்காரிழைப்பாள்மாது கலந்தாரிநாயகத்தை
போரஞ்சாமன்னர் புலந்திரவீரியற்கு
கலியாணம்பண்ணவே காரிழையாளல்லியரும்
சரியொத்தசம்பந்தம் தார்குழலாள்வேண்டுமென்று
வேண்டுமென்றுசொல்லி விரும்பியேமங்கையரும்
ஐவரும்நூற்றுவரும் அப்பவேகூடியொன்றாய்
கூடிமணஞ்செய்தார்கள் குமாரன்புலந்திரற்கு

கலியாணஞ்செய்துமே கடிகிமுடிந்தபின்பு
அப்படியாகவே அநேகநாள்சென்றபின்பு
தேசத்தழகுமன்னன் திரியோதிரப்பெருமான்
பருவமதயானை பஞ்சவர்கள்ஐவரையும்
வலியவேதானழைத்து மாயத்தாற்சூதாடி
பாரவனவாசம் பஞ்சவர்கள்போயிருக்க
அன்றுமுதலாக அருச்சுனனார்புத்திரனும்
காரிழையாள்மாது கலந்தாரிநாயகியும்
அவரவர்கள்தாய்வீட்டில் அருமையாய்வீற்றிருக்க
தங்கள்தங்கள்தாய்மனையில் சதிருடனேவளருகிறார்

அல்லிகொலுச்சபை,

அப்போதுஅல்லியவள் அரசாளுய்நாயகியாள்
அஞ்சாப்பெரும்புலியா யரிவையிளமங்கையரும்
ஆசாரமண்டபத்தில் அருங்கிளியும்வீற்றிருந்தாள்
சண்டிகைக்குஞ்செங்கோற் எதிரொருவரில்லாமல்
தப்பாதரசாண்டாள் தாமரைசூழ்நாயகியாள்
முத்துவளநாடும் முடிகவியும்பெண்பெருமாள்
பட்டமுஞ்செங்கோலும் பாராளும்பெண்பெருமாள்
பிறவாமுடிதரித்த பெண்பெருமாளல்லியரும்
கொம்பேரிடையாள் கொலுகலைந்தபிற்பாடு
வண்டார்குழலாளும் மாளிகையிற்போய்புகுந்து
சிங்காதனத்திலே தேன்மொழியும்வீற்றிருந்தார்
தனக்குக்கவரியிடும் தாதிமுகம்நோக்கி
வயிரக்கவரியிடம் மங்கையரைத்தானழைத்து
முத்தின்கவரியிடம் மூப்பிமுகம்நோக்கி
செம்பொன்கவரியிடம் தேன்மொழியேநீகேளாய்

அல்லிசொற்பனங்கண்டது.

நேற்றையிராத்திரியில் நித்திரைபோம்போது
சொற்பனங்கண்டேனான் துன்னுங்கருங்குழலே
தாமக்கருங்குழலாள் தாதியருங்கூறலுற்றாள்
ஏதேதுசொற்பனங்கள் எனக்கரியகூறுமென்றாள்
பிறவாமுடிதரித்த பெண்பெருமாள்கூறுகிறாள்
சோலைமலருடைய சொக்கனார்கோவிலுக்கு
சேவிக்கபோனதாய் தேன்மொழியேநான்கண்டேன்
சோலைமலருடைய சொக்கரவர்பார்த்து
சிவனுருமப்பொழுது செங்கழுநீர்பூவெடுத்து
அங்கையற்கண்ணம்மை அகிலாண்டநாயகியும்
கொண்டுவந்துயென்கையில் கொம்பனையுந்தான்கொடுத்தாள்
மைந்தர்புலந்திரற்கு வாங்கினேனேற்குமென்று
ஏற்குமென்றுவாங்கி இந்திரனார்கைகொடுத்தேன்

அதனையவர்வாங்கி அவன்தேவிகைகொடுத்தேதன்
மங்கையருப்செல்வப்பெற்று வளர்ந்திருக்கக்கண்டேன்
நன்மையோ துன்மையோ நாயகமேகூறுமென்றாள்
தாழக்கருங்குழலாள் தாதியருங்கூறலுற்றாள்
ஆச்சிநீகண்டகினா அறியவேசொல்லுகிறேன்
உன் மைந்தனுக்குமைந்தன் வாய்க்குங்காண்தப்பாது
புத்திரர்க்குப்புத்திரர் வாய்க்குங்காண்தப்பாது
பிரவாமுடிதரித்த பெண்பெருமாள்கூறுவாள்
ஆரடிதாதியரே அன்னபசுங்கிளியே
பஞ்சவர்கள்நாடுவிட்டு பாரவனம்போயிருக்க
ஐவருங்காட்டகத்தே அனல்பிறந்தாள்காட்டகத்தே
மாலைமுடியார்கள் வனவாசம்போயிருக்க
வண்டார்குழலாளும் மயிர்விரித்துபோயிருக்க
எந்தவனத்திலே இருக்கிறாரென்றறியேன்
பஞ்சவரும்நாடும்பெற்று நாமும்பயந்தெளிந்து
கொற்றவர்கள்நாடுபெற்று வருங்காலமெக்காலம்
வண்டார்குழலாளும் வாழ்பெருவதெக்காலம்
என்மைந்தருக்குமைந்தருமாய் வாய்ப்பதுமெக்காலம்
எண்ணுதுமெண்ணியே எங்கிமுகம்வாடினாள்
தாமக்கருங்குழலாள் தாதியருங்கூறுகிறாள்
(நீர்) கண்டகினவுநன்மை கன்னியரே நீர்கேளீர்
மைந்தருக்குமைந்தராய் வாய்க்கும்புனக்கிளியே

புலந்திரன்பள்ளியறைக்கு அல்லிவந்துகாண்கிறது.

பிறவாமுடிதரித்த பெண்பெருமாள்கூறுவாள்
போரஞ்சாமன்னன் புலந்திரவீரியனார்
(என்) பாண்டியப்பெருமாளின் பள்ளியறையெங்கேயென்றார்
மண்டபத்துக்குள்ளாக மன்னவனார்பள்ளியென்றார்
எங்கேயென்றுசொல்லி எழுந்திருந்தாளல்லியம்மாள்
சிங்காதனத்தை திகழக்குதித்திறங்கி
தாமக்கருங்குழலாள் தாதியருமப்போது
கட்டழகிபெண்ணே கன்னியரேவாருமென்று
மெத்தனவேதானடந்து வேல்பொருதுங்கண்ணாளும்
சித்திரஞ்சேர்மண்டபத்தே சென்றாள்திருவணையும்
தாள்பூட்டிக்கொண்டு தனஞ்செயனும்பள்ளிகொண்டான்
தாமக்கருங்குழலாள் தாதியருமப்போது
பேர்சொல்லிதானழைத்தாள் பெருமாள்புலந்திரனை
அஞ்சுவாய்நாதே ஆரணங்கேபோவென்று
வாளாலேவெட்டி வன்காடிகாண் திறந்தாள்
ஏந்தித்திறந்தாளே இந்திரனற்போற்கதவை
தருமமுடியானுந் தனித்துபடுத்திருந்தான்

தேவியுடனேயிவர் திருத்தமுடன்கூடாமல்
தனியாகப்படுத்திருக்கச் சங்கரனார்கட்டளையோ
பகைகாரன் தலைக்கடையில் பக்தசனவாசலிலே
பாவைதுயிலுரிந்த மாபாவிவாசலிலே
கோதைதுயிலுரிந்த கொடும்பாவிவாசலிலே
சகுனிதலைக்கடையில் சண்டாளன்வாசலிலே
பாற்றுன்றன்வாசலிலே மாலையிடப்பெற்றேனே
மற்றொருவர்வாசலிலே மாலையிட்டேனாகில்
பொற்கைவளநாடியரைப் போகவரப்பாரேனோ
வண்டார்குழலாளை வரப்போகப்பாரேனோ
தொப்பணையார்செய்தகொரு குடிவாழ்க்கைப்பாரேனோ
இந்திரனார்தேவிசெய்யும் யில்வாழ்க்கைப்பாரேனோ
காணாதிருந்தேனே கண்ணுற்றாளானேனே
பாராதிருந்தேனே பாவியானேனே
மைந்தர் புலந்திரனைப் பார்த்தாள்பலகாலம்
கால்கள்தொடங்கியே கரியகுழல்வாயும்
பார்த்தாள்பலகாலும் பார்த்தன்திருமகனை
நாமக்குழலாளும் நாதிமுகநோக்கி
இவர்-பொய்யாமொழியும் பொறுமைதலையழகும்
இவர்கள்தன்னழகும் ஆசாரப்பேரழகும்
தக்கநெறியுந் தவத்திறம்பெருமைகளும்
தக்கபுகழுடைய தருமரைப்போலிருக்கும்
இந்திரனார்மார்பும் இடம்பெரியதிண்டோளும்
வெற்றிமதயானை வீமனைப்போலிருக்கும்
அழகும்பிள்ளைமையும் அர்ச்சுனனைப்போலிருக்கும்
தலையும்தலைக்கட்டும் சகாதேவன்போலிருக்கும்
நடையும்தலைக்கட்டும் நகுலனைப்போலிருக்கும்
விரலும்விரற்கொடியும் வேந்தரைப்போலிருக்கும்
காசிவளநாடாளும் கண்ணனைப்போலிருக்கும்
இவர்திருவழகும் அருமைமகன்தானுமுண்டு
வேறெவருக்குமோ வேல்பொருதுங்கண்ணாளே
மைந்தர்புலந்திரனை வாளாலேதட்டிவிட்டாள்

புலந்திரன் தாயாரைக்காண்கிறது.

சற்றேதான்தட்டலுமே தருமர்திருமகனும்
பொட்டெனவேகண்விழித்து புலந்திரனார்தான்பார்த்து
அவர்-அஞ்சிப்பயந்து அட்சணமெழுந்திருந்து
உத்தமனார்வேந்தன் உருமாலைதான்கழல
திட்டெனவேதான்குதித்தான்செம்பொன்னின்மெத்தைவிட்டு
பூங்காவில்போகவென்றால் பொற்கொடியுங்கிட்டிவந்தாள்
மலர்க்காவில்போகவென்றால் மாதாவுங்கிட்டிவந்தாள்

மாலைமுடியாளும் மலரணையிற்பூவெடுத்து
மாதாவின்பாதபது மலர்தாவிதெண்டனிட்டாள்
வந்துபணிந்தவனை வாளாலேதானெடுத்து
மாணிக்கமெத்தைதன்னை வாளாலேதான்விலக்கி
ஏறியிருந்தாளே ஏகாந்தகட்டிலின்மேல்
போரஞ்சாமன்னன் புலந்திரனுங்கூறலுற்றான்
இன்னேரம்ஆச்சிநீ ரிங்குவந்தகாரியமேன்
நான்-செய்துவந்தகாரியத்திற் செய்தபிழையுண்டோ
ஊரிற்புதுமையுண்டோ நம்மூரிற்குற்றமுண்டோ
நாட்டிற்புதுமையுண்டோ நம்மூரிற்குற்றமுண்டோ
யானைபடுகுழியும் ஆச்சிமிகராச்சியத்தில்
மெத்தகளவுகள் மெல்லியரேவந்ததுண்டோ
கப்பலுஞ்சோங்குங்களவுகள்மெத்தவுண்டோ
இன்னேரம்ஆச்சிநீ ரிங்குவந்தகாரியமென்
சொல்லியேதான்தொழுதான் சுந்தரப்பூமுடியான்
வேறொன்றுமில்லையையா வேந்தர்பெருமானே
அஞ்சாதேயென்றுசொல்லி அணைத்தெடுத்துதாதியர்கள்
ஆடையொதுக்கியே ஆபரணமழைப்பமிட்டு
உத்தமனார்வேந்தருக்கு உருமாலைதானுங்கட்டி
காவலனார்வீரியனுங் கைகட்டிநின்றானே
அஞ்சியேநின்றானே ஐயன்மெருமானும்

புலந்திரனுக்குத் தாய்சொல்லுகிறது.

மைந்தன்புலந்திரனை வளநாடிதான்பார்த்து
தருமமுடியானே தனியாகப்பள்ளிகொண்டாய்
உன்-முச்சினியாள்தானொழிய அசல்நாட்டாளாகாதோ
அத்தைமகளொழிய அசல்நாட்டாளாகாதோ
ஐயனார்கோவிலிலே ஆடும்ரம்பையாகாதோ
நாடகசாலையிலும் நாயகிமார்தங்களிலும்
வேறொருத்தியாகாதோ விஜயன்மகனாரே
கொம்பேரிடையாளே கோவிலிலேதேவடிமார்
எண்பத்தெண்ணூபிரம்பே ரிளங்கொடிமார்தானுமுண்டு
அன்னநடைமாதர்களும் ஆகாதோமன்னவனே
தருமமுடியானே சலிப்புவந்தகாரணமேன்
மதுரையம்பத்தாறுகாதம் ஆளஅரசிருக்க
ஆறுயிரவரென்னும் அணிதிரளாமபாண்டியர்கள்
பொன்னின்மலைநாடாளும்போரெழுதிஅம்மானும்
மாலைமுடியானும்மாமன்மார்தானிருக்க
நானுமிருந்கையிலேநாயகரேயுந்தனுக்கு
தருமமுடியானே சலிப்புவந்தகாரியமேன்
நன்றாகமைந்தனேநான்பெற்றேனென்றிருந்தேன்.

மரவுரியைத்தான் கொடுத்து மன்னவர்களைவரும்
வெய்யலிலேதானிருத்தி வேந்தரைவைத்தானே
தோளுவடிவழகி துரௌபதையாள்நாயகத்தை
தாமக்குழலாளைத் தள்ளிநடக்கவைத்தான்
வேல்பொருதுங்கண்ணாளை வீதிநடக்கவைத்தான்
அன்னநடையாளை அங்காடி மாட்டிவைத்தான்
பாவையழகியனை பருந்தாட்டமாட்டிவைத்தான்
சொல்லாதுஞ்சொல்லியே துகிலுமுரியவைத்தான்
பஞ்சவர்கள்புண்ணியத்தால் பாஞ்சாலன்புண்ணியத்தால்
தக்கப்புகழுடைய தர்மரிடபுண்ணியத்தால்
மாளாதிருந்தது மாதுதுயிலாடை
உரியாதிருந்தது வுத்தமியாள்பூவாடை
அழியாதிருந்தது அணழகிபூவாடை
உழுவிநழுவிதுயில் வுடைகுலைநதாளாயாகில்
வெற்றிமதயானை வீமரதுதெண்டாலே
வீமரதுதெண்டாலே வேந்தர்படைகளெல்லாம்
மாளுவதுஅன்றல்லோ மன்னன்பெரும்படைகள்
சாகிறது அன்றல்லோ தனஞ்சயன்கையம்பாலே
பஞ்சவருந்துரோபதையும் பாரவனம்போயிருக்க
எந்தவனத்திலே யிருக்கிறுரென்றறியேன்
எக்காட்டுக்குள்ளே யிருக்கிறுரென்றறியேன்
மின்னையுடன் தும்பை விருப்பமுடன்காய்கிழங்கு
பண்ணையுடன் தும்பை பறப்பயுடன்காய்கிழங்கு
தின்றுமவர் திரிய தேசாந்திரிபோலே
காடுசெடிதோறும் கடுகிஅவர்திரிய
எனக்குசுகமேது யென்தாயேசொல்லுமென்றான்
பிரவாமுடிதரித்த பெண்பெருமாள்கூறுகிறுள்
அத்தனைக்குபநீர்சலித்தீ ரானந்தவாழ்மார்பா
என்செய்வேன்மகனே யெழுத்துவசந்தப்பாது
தலையின்விதிப்படி தப்பாதொருக்காலும்
பாஞ்சாலிபட்டிரிய பஞ்சவர்கள்நாடுறைய
உன்வலதும்என்வலதும் உத்தமனேயல்லவிது
தெய்வவலதுசண்டர் செப்பொன்முடியாரே

புலந்திரனைகலந்தகாரியிடஞ் சேர்ந்துவாவென்றுசொல்லுவது.

உன்-மச்சினியாள்மீறி வளர்ந்துசமைந்தாளாம்
அத்தைமகள்மீறி அவள்வரக்கண்டேனன்
கண்டேன்கனவிலே கட்டழகிசீர்வடிவை
மச்சினியாள்கோவிலுக்கு மன்னா நீசெல்லுமென்றுள்
பொற்கொடியாள்கோவிலுக்கு போய்வருவாய்புலந்திரனே

புலந்திரன்மறுத்துச்சொல்வது.

போரஞ்சாமன்னன் புலந்திரன்கூறலுற்றான்

பகைவனரண்மனைக்குப் பாவியுடவாசலிலே
சருளிபடுபாவி சத்துருவின்வாசலிலே
என்தாயைத்தூக்கிலுரித்த சண்டாளன்வாசலிலே
கோதைதூக்கிலுரித்த கொடும்பாவிவாசலிலே
மாறுபொருட்டால் வலுவிலுப்போவேனோ
பஞ்சவரும்நாடுபெற்று நாமும்பயந்தெளிந்து
கொற்றவரும்நாடுபெற்று நாமும்குறைநீங்கி
மன்னர்கள்நாடுபெற்று வந்தபிறகாக
வண்டார்குழலுடையாள் வந்ததின்பிற்பாடு
அன்னநடையென்றுடைய தாய்வந்தபிற்பாடு
பொற்கொடியாள்வாசலுக்குப் போவேன்காணுச்சியரே
இப்போதுபோவதில்லை யென்தாயேயென்றுரைத்தார்
அவ்வார்த்தைதான்கேட்டு அல்லியவளேதுரைப்பாள்
தோளுக்குத்தோளு துணைவேணுஞ்சப்பிரரே
காலத்திற்பெற்றபிள்ளை கைக்குதவிகண்டமோ
போனீரேயாமாகில் புத்திரரைப்பெற்றிடுவீர்
பெற்றீரேயாமாகில் பெருண்டாய்வாழ்ந்திடுவீர்
பொற்கொடியாளரண்மனைக்குப் போவீர்புலந்திரரே
போரஞ்சாமன்னன் புலந்திரனுங்கூறலுற்றான்
எனக்குமோரையாண்டு ஏந்திழையாள்மூவாண்டு
மாலையிட்டபிற்பாடு மாதுஅறியாளே
அதுபலர்க்குமக்கிலியம் தரிக்குவகையானறியேன்
என்னையவளும் ஏந்திழையாள்தானறியாள்
நானும்வளர்ந்தது நாயகியும்தானறியாள்
என்-மாமியார்வீட்டை மறுபடியும்போனதில்லை
மாமியார்வீட்டிலே மறுவுண்டுவந்ததில்லை
பொற்கொடியாள்வாசலுக்குப் போதும்வகைசொல்லுமென்றார்

பிள்ளைபீதிக்கோபிதது விலங்குபோடச்சொல்லுவது.

அரசாளும்நாயகியாள் அல்லியருந்தான்கேட்டு
சீறியெரிபறந்து செவ்வாய்கருகவிட்டு
எதிர்த்தெதிர்த்துப்பேசுவதும் என்னுடன்சொல்லுவதும்
மறுத்துத்தடுக்கிறாய் மன்னகருவமென்ன
இந்தகருவத்தை யிப்போதடக்குவேன்பார்
கட்டழகிதாதியரே கருமானையழையுமென்றாள்
விஜயனார்தன்மகனை விலங்குமேலேபோடுமென்றாள்
கால்விலங்குகைவிலங்கு கழட்டொண்ணுப்பெருவிலங்கு
மார்விலங்குதோள்விலங்கு மன்னனுக்குப்போடுமென்றாள்

புலந்திரன் சொல்வது.

போரஞ்சாமன்னன் புலந்திரனுங்கூறலுற்றான்
என்னைவிலங்குபோட வென்செய்தேனென்தாயே
போகாதஅரண்மனைக்குப் பொற்கொடியேபேனேனோ

மங்கையர்கள்கோவிலுக்கு வலுவிலுப்போனேனோ
குடிமக்கள்வாசலிலே கூசாமல்போவேனோ
உப்பரிகையேறிநான் உயரக்குதித்தேனோ
கப்பல்கள்சோங்குகள் களவுகள்செய்தேனோ
என்னகொடுமைசெய்தேன் என்னைவிலங்கிலிட
அரசாளும்நாயகியாள் அல்லியருங்கூறுகிறாள்
ஆரடாதம்பியரே அல்லவென்றால்போகாது
அத்தனையுமல்லாமல் அரசேநீர்கேட்டருள்வீர்
மச்சினியாள்மீறி வளர்ந்துசமைந்திருக்க
மாதுசிறையிருக்க மன்னவனேயாகாது
குடியாள்சிறையிருக்க கொற்றவனேயாகாது
நாடும்வாராதுமன்னா நகருகளும்சேராது
ஊரும்வாராதுகண்டீர் உத்தமனேயுந்தனுக்கு
மச்சினியாள்கோவிலுக்கு மகனேநீசெல்லுமென்றாள்
போரஞ்சாமன்னன் புலந்திரனும்கூறலுற்றான்
உன்-ஆக்கினைக்குத்தான்பயந்து ஆச்சியரேபோனாலும்
அவள்கற்கோட்டைமுத்திரையுங் கர்னனிடகாவல்களும்
சுத்திமதிலெழுப்பி சூரியனைக்காணாமல்
பக்கமதிலெழுப்பி பகவானைக்காணாமல்
வாசலுக்குஆயிரம்பேர் வாள்வீரர்காவலுக்குள்
உருவினஆயுதங்கள் உறையிலேபோடாமல்
விழித்தகண்சிமிட்டாமல் மெல்லியிடமிருப்பார்
காசிவளநாடாளுங் கர்னனதிகாரன்
தாமக்குழலாளின் தலைவாசல்காப்பானும்
அத்தனையுந்தான்கடந்து ஆச்சியரேபோனாலும்
ஆயிரந்தாதி அவளருகேயிருப்பாராம்
அம்மாநீராடி ஆடுங்கழலாடி
விளையாடிவீற்றிருப்பார் மெல்லியராயிரம்பேர்
பொற்கொடியாளரண்மனைக்குப்போகும்வகைசெப்புமென்றார்
அரசாளும்நாயகியாள் அல்லியருமேதுசொல்வாள்
ஆருமறியாத அம்மனைக்காணாதே
அருகிருக்குந்தோழியர்கள் யாருமறியாமல்
மாதினிடவாசலிலே மன்னவரேநீர்போவீர்
மேகப்புரவிபிது வேந்தனேநான்தருவேன்
என்னாணைமன்னாநீ இனியொன்றுஞ்சொல்லாதே
மன்னாநீபேசாதே மன்னர்பெருமானே
தருமர்திருவாணை தம்பிமார்தன்னாணை
காடுறைந்தபஞ்சவர்கள் கட்டழகிதன்னாணை
பின்னையொன்றுஞ்சொல்லாதே பெருமாளபுலந்திரனே
மச்சினியாள்கோவிலுக்கு மன்னாநீசெல்லுமென்றாள்
போரஞ்சாமன்னன் புலந்திரனுமேதுசொல்வான்.

அவர்-எந்தவனத்தில் இருக்கிருரென்றறியேன்
இதுவொருகாரியமாய் இவ்வாணைவந்திதென்ன
மாளவென்ருல்மாளுகிறேன் மாதாவேஇப்போது
ஆணைவிடுந்தாயேயென்று அடிவணங்கிதெண்டனிட்டான்
வந்துபணிந்தவரை வாளாலேதானெடுத்து
ஆணைமூகர்பஞ்சவர்கள் ஐவரிட ஆணைவிட்டேன்
காடுறைந்தபாஞ்சாலி கட்டழகிஆணைவிட்டேன்
தருமருடஆணைவிட்டேன் தம்பிமார் ஆணைவிட்டேன்
மாதருடன் கூடி மருவிவருமளவும்
என்னுணைமட்டும் இருக்கட்டும் இந்திரனே
என்றுமவளுரைக்க வின்பமுடன்தான்கேட்டு
மாதாவும்பாத மலர்தூவிதெண்டனிட்டு
கொம்பனைக்குதெண்டனிட்டு கூறுவானிந்திரனும்
உம்மாணைகொண்டுநான் ஊர்வழியேபோவேனே
தாயாணைகொண்டுநான் தனிவழியேபோவேனே
போனவிடத்திலே பொற்கொடியேயெந்தனுக்கு
ஆணைவிடுமென்று அடிவணங்கிதெண்டனிட்டான்
அரசாளும்நாயகியாள் அல்லியருந்தான்கேட்டு
விட்டேனேயாணையெல்லாம் வேந்தர்பெருமானே

அல்லி இந்திரனைக்குறித்துப் ரவிவாங்குவது.

ஆகாயவான்புரவி அழைப்பித்தானான் தருவேன்
இந்திரவேந்தரும் இங்கேயிருமென்றுசொல்லி
கட்டழகிநாயகியும் காவலிலேபோய்புகுந்து
ஆபூசனையில் அரசியருந்தானிறங்கி
காலோடுகண்ணுங் கனிவாயுங்கொப்பளித்து
வாயோடுபல்லும் மகிழ்ந்துசுத்திசெய்து
தென்மதுரைநாடாளுந் திருநீற்றுக்காப்பணிந்து
இருந்துநின்றுமே சிவனையடிபணிந்து
தேவேந்திரனை நினைத்தங்கே தெண்டனிட்டாள்
மைந்தர்புலந்திரற்கு வான்புரவிவேணுமென்று
மைந்தனுக்குச்சகாயமாய் வரவழைக்கவேணுமென்று
ஆகாயவான்புரவி யாரணங்குவேண்டுமென்று
இந்திரனைநோக்கி எந்திழையுந்தெண்டனிட்டாள்
மருமகள்காணினைக்க மன்னவருந்தான்கேட்டு
தேவேந்திரருந்தான் தேவிமுகம்நோக்கி
கண்டாயோபெண்ணரசே கயற்கண்ணாள்நின்றவிதம்
தன்-மைந்தருக்குமைந்தன் வாய்க்கவேவேண்டுமென்று
புத்திரற்குப்புத்திரராய்ப் பிறக்கவேவேண்டுமென்று
தவசுமேசெய்கிறாள் தையலிளம்பிறையாள்
என்றுரைக்கஇந்திரனார் இந்திராணிதான்கேட்டு
தேங்காய்க்குழுமன்றுகண் தேசத்திலென்பார்கள்

ஓடுமயில்கண்ணுடைத் ஒருகண்ணேயுள்ளதுவும்
தோளுக்குத்தோளு துணைவேண்டுமித்திரரே
அதனாலேயல்லவோ யாரணங்குவருந்துகிறாள்
ஆகாயவான்புரவி அனுப்பவேவேண்டுமென்றாள்

தேவேந்திரன் புரவிகொடுத்தது,

தேவேந்திரபகவான் சிரித்துமனமகிழ்ந்து
வானத்துபோகங்களை வானவர்கோன்வரவழைத்து
பார்த்தானேயிந்திரனும் பர்வைகள்கொள்ளாமல்
இப்படிக்குபோனாலே இந்திரர்க்குஎர்க்காது
என்றுஇவர்நினைத்து இன்பமுள்ளபேரனுக்கு
பூமியில்வாழுகிற புரவியைப்போல்சோடித்து
அங்குபடிவைத்தலவோ அழகாயலங்கரித்து
நாலுகால்வண்டயமாம் நடுக்கழுத்திற்கொலுசுகளாம்
செம்பொன்சிறுசதங்கை சேர்ந்தபலகரையும்
அம்பொன்னின்கிண்கிணியும் அழகாகபூட்டினாராம்
மாணிக்கந்தன்னாலும் வைடூரியந்தன்னாலும்
நெற்றிக்குசுட்டிகட்டி நேர்முழிக்கிமையெழுதி
மெத்தைதமடித்திட்டு மேலேயணைகோவி
சித்திரஞ்சேர்பட்டு சீராய்மடித்துவிட்டு
குப்பியில்சாந்துகளும் குழாவில்புனுகுகளும்
வாய்த்தயிலைச்சுருளும் வர்ணப்பலாக்காயும்
தட்டுப்புனுகுகளும் சவ்வாதுபரிமளங்கள்
பூவாலலங்கரித்தார் புலந்திரனார்புரவிதனை
வகைவகையாய்ப்பூச்சரங்கள் வைத்துப்புரவியிலே
சோடித்தலங்கரித்து சுந்தரற்குவேண்டுமென்று
தேவேந்திரபகவான் சிரித்துஅலங்கரித்து
ஏற்குமோயிப்புறவி இந்திரற்குஏற்குமென்று
தட்டிப்புறவியைத் தாமந்தவாழ்மார்பன்
குதிரைக்குபதேசங் கூறினார்காதிலேதான்
ஆகாயம்போகாதே அவலோகம்போகாதே
செய்பொன்மணிமுடியான் தேவியுடகோவிலுக்கு
ஒருசாமபொழுதிலே இருக்குமட்டுந்தானிருந்து
இருசாமமங்கே இருக்குமட்டுந்தானிருந்து
விடியவொருசாமத்திலே விடுபட்டுவந்துவிடு
அப்போதுவான்புரவி அவருடனேசொல்லுகுது
அருளருளும்ஐயாவே அப்படியேயாகுமென்று
வந்ததுகாண்புரவி மதுரைவளநாட்டிற்கு
செம்பொன்கடிவாளம் தென்னுகைப்பிடித்து
மலர்க்காவிதான்கடந்து வையவளநாடியரும்
மைமந்தனிருக்கிறதோர் மண்டபஞ்சேர்ந்தேறினான்

உத்தமியுமைந்தனுமாய் ஒக்கவுலாகொடுத்து
சித்திரஞ்சேர்மண்டபத்தில் தேன்மொழியாள்வீற்றிருந்தாள்
முடிபூவுஞ்சந்தனமும் மெல்லியருந்தான்வாங்கி
அடைக்காயும்வெள்ளிலையும் அன்பாகத்தான்வாங்கி
மைந்தருக்குத்தான்கொடுத்து மாதுநல்லாளப்பொழுது
தானுமிலையமிர்தம் தையலருந்தினாளே
மாதாயிளைப்பாற வான்கவரிவீசினார்கள்
தாமக்கருங்குழலாள் தாதிமுகம்நோக்கி
கொண்டுவந்துபூட்டுமென்றாள் குமாரன்புலந்திரற்கு
மச்சினியாள்மெச்ச வகைவகையாய்ப்பூஷணங்கள்
ஆபரணப்பேழை அலைகோதிதான்திறந்து
ஆனந்தமார்பனுக்கு ஆபரணந்தானெடுத்து
தெரிந்தபணிதிகளை செம்பொற்றளிகைவைத்து
கொண்டுவந்துமுன்னேவைத்தாள் கொப்பேரிடையாளும்
தென்னர்பெருமான் திருமேனிதீண்டவல்லான்
ஆனந்தமார்பனுக்கு அருகாகவந்துநின்று
முத்தினுறுமாலை முகம்நிறையத்தான்றரித்து
வேதிச்சநற்புனுகால் மின்னமுகந்துடைத்து
கட்டழகர்நெற்றியிலே கஸ்தூரிப்பொட்டுமிட்டு
தேனல்லோதாரன் திருநீற்றுக்காப்புமிட்டி
ஈரெட்டுப்பூண்கடுக்கன் யிட்டுமிவன்காதில்
அனந்தமுடிசூட்டி அழகாகப்பூட்டினார்
ஒருமுத்தேமுத்து உலகமெல்லாம்பெற்றதுபோல்
பாரியமுத்துப் பரிமுத்துதாழ்வடமும்
நவரத்தினப்தக்கம் நாகரீகத்தாழ்வடமும்
ஆரப்பதக்கமும் அழகுசரப்பளியும்
பார்த்தப்பணித்திரமும் பருமுத்துத்தாழ்வடமும்
முன்கைமுதாரிகளு முழுகடகமோதிரமும்
சந்திரகடகங்கள் தாயித்திசோதிமின்ன
அஸ்தகடகமும் அழகானமோதிரமும்
முத்திரைமோதிரமு முன்கையிற்கடகமும்
செம்பொன்பவுத்திரமும் சேர்ந்தகணையாழிகளும்
பொன்னினரைஞாணும் பூட்டினாற்பொற்சலங்கை
கச்சையிறுகணிந்து கத்திமிச்சொருகி
பாங்குகள்தான்சொருகி பாலனிடதாளில்
பூஞ்சிலம்புந்தண்டையும் பொன்மெட்டுந்தானணிந்து
ஆபரணமெல்லாம் அடங்கலுந்தான்பூட்டி
இழையாயிரப்பொன்பெற்ற இந்திரவர்ணப்பச்சைவடம்
ஆனந்தமார்பனுக்கு ஆடைவரிந்துகட்டி
சிருஞ்சனமாகவே நின்றதொருமேனியெல்லாம்

ஆகாயமாகவே அப்புறவிதான்பறக்க
அந்தரமார்க்கத்தில் அப்புறவியெழும்பினதே

அல்லியம்மாள் புலம்பல்.

மைந்தனைப்போகவிட்டு வாடிமனந்தளர்ந்தாள்
போகமாட்டேனென்றானே வலியநான்போகவிட்டேன்
என்னறிந்தானோ காவலர்கள்கண்டாரோ
காலாக்கடுந்திரளார் நாற்றெருவர்கண்டாரோ
மாலைமுடியானை வதைசெய்தாராமாயின்
மானும்படியொழிய மண்ணிலிருப்பதில்லை
பஞ்சவருக்கென்னசொல்வேன் பாஞ்சாலிக்கென்னசொல்வேன்
வெற்றிமதயானை வீமருக்கென்னசொல்வேன்
அண்ணவர்க்கென்னசொல்வே னருச்சுனருக்கென்னசொல்வேன்
சோலைமலருடைய சொக்கரல்லோசெய்ததெல்லாம்
அவரிட்டசொக்கலிங்கமோ யாதென்றுநானறியேன்

அல்லிசொக்கநாதர் கோவிலுக்குவந்தது.

தண்டிகைதானிருக்க தையலருந்தானிருக்க
தானுமிழிந்து தையலருமங்கோம்
சோலைமலருடைய சொக்கருடகோவில்வந்து
முக்காலவலம்வந்து முடிவணங்கிதெண்டனிட்டாள்
மைந்தர்புலந்திரற்கு வாட்டங்களில்லாமல்
மன்னர்புலந்திரனார் வந்தாரேயாமாகில்
ஆலாத்திப்பெண்கள் அதிசயமாய்தான்தருவேன்
மாடைவராகனு மாணிக்கரத்தினமும்
செம்பொன்னின்முத்துகளும் சுவாமியேநானளிப்பேன்
தண்டிவந்தபொன்னையெல்லாஞ்சங்கரனேநான்றருவேன்
கொண்டுவந்துதான்சொரிவேன் கோபுரவாசலிலே
மைந்தர்புலந்திரற்கு வல்வினையில்லையென்று
திருமுடியில்புஷ்பமது சேரவேதள்ளுமென்றாள்

சொக்கர்மீனாட்சியை நோக்கிச் சொல்வது.

சோலைமலருடைய சொக்கருந்தான்பார்த்து
அங்கையற்கண்ணுமையை அரனருந்தான்பார்த்து
கண்டாயோமாதேநீ கயற்கண்ணுளின்றனிலே
எத்தனைநேரமட்டும் இவள்கெஞ்சிநின்றாலும்
பொற்கொடிமாதருக்குப் புஷ்பங்கள்கொடுப்பதில்லை
அங்கயற்கண்ணம்மா ளவர்முகத்தைதான்பார்த்து
எல்லோருக்குங்கண்கள் இரண்டென்பாராச்சியத்தில்
தேங்காய்க்குகண்மூன்று தேசத்திலென்பார்கள்
ஓடமலர்கண்ணுட்கு ஒருகண்ணேயுள்ளதுகாண்
பிறந்ததுகன்னியானல் பிள்ளைதுணைவேணும்
அதனால்வருந்துகிறா ளாரணங்கின்னேரம்
பொற்கொடியாள்மாதருக்குப் புஷ்பமதுகொடுமென்ன

சங்கரருமப்போது சற்றேநகைநகைத்து
மங்கைபரிதாபந் தையலரேகண்டாயோ
வெட்டுவேன்குத்துவேன் விலக்கிடுவேனென்றுசொல்லி
ஆக்கினைகள்செய்து அவனையிவள்போகவிட்டாள்
எத்தனைநேரமட்டும் இவள்கெஞ்சிநின்றாலும்
பொய்கைவளநாடியற்குப் புஷ்பங்கொடுப்பதில்லை

மீனாட்சிசொக்கருக்குச் சொல்வது,

அங்கையற்கண்ணம்மை ஆதினத்தைவிட்டிறங்கி
மகாதேவர்பாதமது வணங்கியேதெண்டனிட்டு
அங்கையற்கண்ணம்மை அருகில்வந்தென்னசொல்வாள்
ஆராயிரவர்களும் அணிதிரளாம்பாண்டியர்கள்
மாளுவோமென்று மலைமேல்தவமிருந்தார்
மாளாதேயென்று மலரிலவதரித்தாள்
வீறுகச்செங்கோல் செல்விசெலுத்திநின்றாள்
மன்னன்விஜயன் மடலூர்ந்தமாதேவி
காளைவிஜயனுர் கட்டழகன்தேவியிவள்
சிறுவிரல்பாதம்ரெண்டு சிலம்புக்கால்கொப்பளிக்க
செண்பகப்பூமேனடிகள் திருவினைக்குத்தானே தை
எத்தனைநேரமட்டாய் இளங்கொடியாள்கெஞ்சிநிற்க
இப்படிக்குநீரிருக்க யிதுவுமக்குத்தருமமல்ல
பொற்கொடிமாதுக்கும் புஷ்பமதுகொடுத்தால்
சந்தோஷமாயிடுவாள் தருமமுடியழகி
சங்கமருமப்போது தயவாய்மனமிறங்கி
சிவனருமப்போது திருமுடியைத்தானசைக்க
ஏலங்குழலாளும் இருகையுந்தானிறைய
வாங்கிமடியில்வைத்தாள் மதுரைவளநாடியரும்.

சொக்கர்பிள்ளைக்குத் துணைபோனது.

சொக்கருங்கூட துணைபோகவேண்டுமென்றாள்
சிவனுருமப்போது தேவிமுகநோக்கி
ஆரமுலைபாளே ஆளடிமையானேமே
அது-சந்தேகமென்று சங்கரியுந்தான் சிறித்தாள்
சொக்கருங்கூடத் துணையாகத்தான்போனார்
சந்நிதியைவிட்டுச் சுவாமியவர்போனார்
தீர்த்தமுந்திருநீரும் திருமாலைச்சந்தனமும்
கொண்டெதிரேதந்தார்கள் கொம்பேரிடையாட்கு
தீர்த்தந்தெளித்தார்கள் திருநீற்றுக்காப்பணிந்தார்

அல்லிக் கொலுவுக்குவந்தது.

சந்நிதியைவிட்டுத் தையலருந்தானபார்த்தாள்
[illegible]

பூமரங்களத்தனையும் புலந்திரன்றான்பார்த்து
பஞ்சவர்கள்கோமானும் பார்த்தன்திருமகனும்
வந்தாரேயிப்பொழுது மச்சினியாள்கோவிலுக்கு
என்னத்தைநாம்கொடுத்து இந்திரரைக்காண்கிறது
பூவாலேபச்சைவடம் புலந்திரரைக்காண்கிறது
கொண்டுவந்துபோத்தினார் கொற்றவர்கள்புலந்திரற்கு
பூமரத்தைப்பார்த்து புலந்திரனுங்கூறுகிறான்
காவலர்கள்பஞ்சவர்கள் காடுரைந்துபோயிருக்க
வண்டார்குழலாளும் மயிர்விரித்துப்போயிருக்க
ஆர்முடிக்கபூத்தீர்கள் அழகியபூமரமே
தாயாதிதான்முடிக்க சார்பாகபூத்தீரோ
மாற்றான்முடிக்கவோ வந்துமலர்சொரிந்தீர்
பூமரங்கள்கூறும் புலந்திரனைத்தான்பார்த்து
ஐயாநீகேளீர் அடியேன்விண்ணப்பத்தை
மாலைமுடிபாண்டவர் வனவாசம்போனவன்றே
காவலர்கள்பாண்டவர் காடுறைந்தநாள்முதலாய்
தக்கப்புகழுடைய தர்மர்வனம்போனவன்றே
நல்லமழையில்லை நாட்டில்விளைவுமில்லை
சென்னல்விளைவுமில்லை தேசஞ்செழிப்புமில்லை
பூவுகள்மலர்ந்து பூமரங்கள்பூவாது
ஆவுங்கறவாது அரும்பாவிபட்டணத்தில்
வெள்ளியுந்தெற்கடந்து வேந்தனும்போய்மறைந்து
கன்னியும்கால்மறுத்து கடலுந்திசைமாறி
பாழாயிருக்குதையா பட்டணங்களத்தனையும்
வேந்தர்பெருமாளே மலராகநாமிருந்தோம்
மாலைமுடியானே வருகிறதுநாமறிந்து
இப்போதிலைதுளிர்த்து இந்நேரம்பூத்தோம்
வருகிறநாளறிந்து மலர்சொரிந்தோமன்னவரே
வருவதற்குமுன்னமே மன்னவரேபோவோமோ
போரஞ்சாவீரன் புலந்திரனுங்கூறுகிறான்
ஓட்டினார்பன்னிரெண்டு உத்தமர்கள்பஞ்சவரை
மாலைமுடிபாண்டவர்கள் வருநாளுந்தானாச்சு
ஆளுவார்பாண்டவர்கள் மாளுவார்நூற்றொருவர்
நம்முதுநாடுகளும் நமக்குத்தான்றாச்சியமும்
எதுக்குமஞ்சாதேயிருமென்றார்மன்னவரும்
அப்போதுபூமரங்கள் அழகுமெத்தைதான்போலே
புஷ்பமெத்தைசோடித்து புலந்திரற்குதான்கொடுக்க

தருமாபுரத்தில் அதிசயங்காண்கிறது.

அப்பால்திரும்பி ஆணழகர்வருகையிலே
அக்காட்டில்வீற்றிருக்கும் அன்னமுந்தாராவும்

வீமரது ஆதினமும் விசையனுராதினமும்
நகுலரது ஆதினமும் சகாதேவராதினமும்
மன்னவர்களாதினத்தில் மாற்றுனைக்கண்டானே
தருமரது ஆதினத்தில் சண்டாளனுள்கிருனே
பாண்டவர்கள் தன்னுடனே பகுந்தரசாளாமல்
பாதிஅரசுஅவர் பங்கிட்டுஆளாமல்
எதனுலேகாடுறைந்தார் யென்னுடையஐயன்மார்
தருமத்தையெண்ணியவர் தரணியிழந்தார்கள்
புண்ணியத்தையெண்ணியவர் பூமியிழந்தார்கள்
அரண்மனையைப்பார்த்து அழகியகண்முத்துதிர்த்தான்

துரௌபதை யரண்மனை காண்கிறது.

தோராவடிவழகி துரௌபதையாள்வாசலிலே
நாணற்கொடிமுறுக்கி நற்கொடியாள்முத்தழுத்தி
பானுஞ்சுடரும் பசுபொன்னுலேயடித்து
மாணிக்கத்தாலும் வைடூரியத்தாலும்
ஆணிப்பொன்னுலே அழுத்தியசீரவ்வாசல்
ஆச்சிதலைவாசல்கண்டு ஆணழகன் வயிறெறிந்து
மாளிகையுமிங்கிருக்க மண்டபமுமிங்கிருக்க
ஆண்டமனைகளும் அரண்மனையுமிங்கிருக்க
மூந்நூறுதாதியர்கள் முறைசெய்துவந்துநிற்க
ஏறியிருக்குமந்த யிட்டசிங்காதனமும்
ஆச்சிமாரெல்லோரும் அடியாளையாளவந்தார்
பருகல்உறுத்தவே பறுமணல்சள்தானுதிர
காடுதலையிழுக்க கன்னிதுயில்முள்ளிழுக்க
கானலிலும்வெய்யலிலுங் கதறியவர்திரிய
எக்காட்டுக்குள்ளே யிருக்கிறுளென்தாயார்
ஆச்சிதலைவாசல்கண்டு அழகியமுத்துதிர்த்தான்
இந்திரருமப்போது எங்கியழும்போது
கொண்டுபறந்ததப்போ குலவீரன்றன்புரவி

புலந்திரன் அத்திபுரங்காண்கிறது.

ஆகாயமார்க்கத்திலே அப்புரவிதான்பறக்க
அத்திபுரங்கண்டாரே ஐவர்திருமகனுர்
அந்தவளநாட்டிடை அடுத்ததுஅப்புரவி
அம்பலமோவென்றுலோ ஐந்நூறுகாதவழி
இடம்பெரியவாசலது யெழுநூறுகாதவழி
தாணுக்குத்தாணுமங்கே தொண்ணூறுகாதவழி
ஆயிரங்காதவழி அகலமுள்ள அம்பலத்தில்
நானூற்றுக்காதவழி நீலம்பெரியஅம்பலத்தில்
முந்நூறுகாதவழி முத்தளித்தவம்பலத்தில்

பொற்றாணுங்கற்றாணும் பேரிசைவுத்தாமும்
குளிர்ந்தசந்தனத்தூணுங் குங்குமகற்றாணும்
தூணுக்குத்தூணு தூணைபலையாய்ச்சேர்த்து
மெத்தையலங்கரித்து மேற்கட்டி தான்கட்டி
சுத்தியலங்கரித்துத் தோரணங்கள் தான்கட்டி
கண்ணாடிசல்லிகட்டி காவலன்றன்னம்பலத்தில்
சக்கிழைத்தமண்டபமுஞ் சங்குமுத்துமாலைகளும்
எங்கெங்குஞ்சோதிவிட எழில்முத்துமாலைகளும்
வந்துநிழல்காட்டும் மாணிக்கமாலைகளும்
வாடாததாமரையும் வந்துநிழல்காட்ட
முத்துமரகதமும் முழுபவளச்சிலைகளும்
தங்கத்தாற்பொம்மைகளுஞ் செங்கழுநீர்பாவைகளும்
செம்பொன்னாற்சிலைகளும் பசும்பொன்னாற்றூணுகளும்
எங்கெங்குஞ்சோதிவிட இராசாவினம்பலத்தில்
சித்திரஞ்சேர்மண்டபத்தில் செம்பவளமாலைகளும்
வந்துபரிமளங்கள் வாசனைகள் தான்வீச
வாழைகமுகுகளும் வர்ணபலாச்சோலைகளும்
சேரவேநாட்டிய திகழ்பெரியஅம்பலத்தில்
நின்றவிடந்தோறும் நிலைதோறுஞ்சப்பமஞ்சம்
பார்த்தவிடந்தோறும் பந்தங்கள்சேர்விளக்கும்
காடைவிளக்குகளும் கைவிளக்குமேதர்விளக்கும்
ஏணிவிளக்குகளும் சண்முகதேர்விளக்குகளும்
தருமமுடியாக்குச் சப்பிரநல்விளக்கும்
பந்தங்கள்சேர்வையும் பகல்வத்திபிடிபாணம்
பூவர்ணமத்தாப்பும் பொற்பாணந்தான்முழங்க
எத்திசையுந்தான்முழங்க விட்டிருக்குமம்பலத்தில்
ஏறியிருக்குமந்த எழுமணிசிங்காதனமும்
வந்திருக்குமன்னர் மகாசேனைகள் நடமேனை
மூன்றாறுகோடி முடிமன்னரங்கிருக்க
சட்டிபிடிமன்னவர்கள் யியலாகவங்கிருக்க
பாங்குபிடிக்கிறதோர் படைமன்னரங்கிருக்க
கத்திபிடிக்குமன்னர் காவலர்களங்கிருக்க
கோடிலட்சங்கோடி கொற்றவர்களங்கிருக்க
சட்டைக்கழட்டாத சாமந்தரங்கிருக்க
வேதப்பிராமணரும் வேதியருமங்கிருக்க
பாஞ்சாலமகாராசன் படைகளுமங்கிருக்க
காசிவளநாடாண்டார் கர்னனதுசேனைகளும்
கரும்பசையத்தேன்சொரியுஞ் சோழன்பரிகலமும்
எடல்லோதானவன யிடும்பன்பரிகலமும்
ஆரங்கேவேதமோது மகஸ்தியனார்தந்தருளும்
மதுரைபரிகலமும் வளநாடிசேனைகளும்

தக்கப்புகழுடைய தருமர்சொற்கேட்டாரோ
அன்றுநான்சற்றே வறிந்திருந்தேனுமாகில்
தக்கப்புகழுடைய தருமர்சொற்கேளேனே
நாலாக்கடுந்திறலார் நாற்பெருவர்முடியை
வெட்டிபொடியிடுவேன் வீரபாகாளியற்கு
பட்டந்தரித்து பாருலகையாளவைப்பேன்
காவலர்களைவருடன் கைக்கட்டிசேவிப்பேன்
இதுபத்திரியென்றின்று பதகளித்த அம்பலமோ
உத்தமிராசன்றன்றுகில் உரிகொடுத்தவம்பலமோ
பாவைமனமுருகப் பருந்தாட்டமாட்டிவைத்தான்
அம்பலத்தைபார்த்து அனைமுகன்வயிறெரிந்து
சட்டமுகன்கோபாவம் கண்ணிரையமுத்ததிர்த்தான்
இந்திரனுமங்கே ஏங்கியழும்போது

புலந்திரன் கலந்தாரிகோட்டையைக்காண்கின்றது.

மேலாய்ப்பறந்தது வேந்தனதுதன்புரவி
காரிழையாமாது கலந்தாரிகோட்டைகளாம்
கற்கொட்டைமூத்திரையுங் கர்னனதுகாவல்களும்
ஆழமணல்பறித்து ஆகாசகோட்டைகட்டி
சுற்றிமதிலெழுப்பி சூரியனைக்காணுமல்
அஷ்டமதிலெழுப்பி ஆதித்தனைக்காணுமல்
வாசற்பதினெட்டும் வைத்திருக்குங்காவல்களும்
விழித்தகண்கிமிட்டாதே மெல்லியர்க்குக்காவல்களாம்
தாமக்குழலாட்கு தலையாரியோடிவந்து
நாககூரமூத நற்கவரிகொம்பூத
கூடமுழங்கவே குலவீரர்சூழ்ந்துவர
கொக்கரித்துநாற்றிசையுங் கூத்தாடிபாடிவர
ஆர்ப்பரித்துஓடிவர்தார் அன்னநடையாட்கு
கண்டான்புலந்திரனுங் கண்கள்ரெண்டுங்கொள்ளாதே
இதுபாமன்பார்க்காவல்களோ வைத்தவரிசைகளோ
அம்மான்மார்க்காவல்களோ அத்தைவரிசைகளோ
என்றுநகைநகைத்து இந்திரனும்பார்த்திருந்தார்.

சொக்கர் பிராமணர்போல்வந்து கர்ணருக்குச்சொல்வது.

மாலைமுடியானும் வந்ததற்குமுன்பாக
சோலைமலருடைய சொக்கருமப்பொழுது
பஞ்சாங்கவேதியன்போல் பாமன்வடிவெடுத்து
மன்னர்கருணர்முன்பு மறையவர்போலேவந்து
ஆள்வருத்தாய்காணுது அதிகருணவீரியரே
பத்திரமென்றுசொல்லி பாமனும்போய்மறைந்தார்
சொல்லியேபோய்மறைந்தார் சொக்கருமப்பொழுது

கர்னர்கலந்தாரிகோட்டைவருகிறது.

அங்கதேசநாடாளும் அதிகர்னவீரியரும்
காரிழையாமாது கலந்தாரிகோட்டைவந்தார்
எண்ணவொண்ணுமகாசேனை எண்பத்தெண்ணுயிரம்பேர்
உருவினஆயுதத்தை உரையிலேபோடாமல்
விழித்தகண்சிமிட்டாமல் மெல்லியாளைப்பார்த்திருந்தார்
தருமமுடியானுந் தலைவாசல்வந்துநின்று
அத்தண்டகாவலரை அதிகர்னன்தான்பார்த்து
அந்திப்பொழுதிலே ஐயர்வந்துசொன்னுரே
ஆள்வருத்துயென்று ஐயர்வந்துசொன்னுரே
காவலர்கள்வீரியரே கண்ணுண்டாய்பார்த்திருங்கள்
திட்டங்கள்சொல்லியே திரும்பிவந்தவேளையிலே

கர்னன் கலந்தாரிக்கு நடனசேர்வைவைத்தது.

சுந்தரப்பூமுடியாள் தூக்கம்வருகுதென்று
கேளிக்கைவேண்டுமென்றுள் கிளிமொழியாள்நாயகமும்
அப்படியேநல்லதென்று அட்சணமேசீர்கருணர்
நட்டுமுட்டுநாகசுரம் நலமுடனேயனுப்பிவைத்தார்
சதுர்தீர்ந்தகொலுவதனில் தானமர்ந்தாள்மாதுகன்னி
அப்போதுமாதருக்கு ஆடலும்பாடல்களும்
பதினெட்டுமேளம் பண்பாகத்தான்முழங்க
சிற்றிடையாள்மாதர்கள் சிலம்புகலகலென
ஆட்டமுங்கூற்றும் அரம்பையர்நாடகமும
நாடகமுங்கூற்றும் நடுநடுவேசிந்துகளும்
ஆடாதகூத்துகளும் ஆடினாயிரம்பேர்
கேளிக்கைபார்த்திருந்தாள் கிளிபவளவாயாளும்

புலந்திரன் ஆகாயத்தில் அதிசயப்படுகிறது.

ஆடல்பாடல்சத்த மகாயந்தான்கேட்க
பெண்ணூரலோசை புலந்திரற்குகேள்விபட
கோட்டைக்குள்கேட்கிறது கொம்பனையாளிருப்பிடமோ
காதுற்றுக்கேட்டிருந்தார் கனத்தபுரவியின்மேல்

கலந்தாரிக்குச்சொக்கர் சொற்பனஞ் சாதித்தது.

மாலைமுடியானும் வருவதற்குமுன்பாக
சோலைமலருடைய சொக்கருமேதுசொல்வார்
பஞ்சாங்கவேதியன்போல் பத்தினியாள்பக்கம்வந்து
மாதுநித்திரைசெய்கையிலே மறையவர்போலேவந்து
சொற்பனஞ்சாதித்தார் துன்னுங்கருங்குழற்கு
மங்கையரேஉன்னுடைய மணவாளன்வந்தான்காண்
வந்தான்காணென்றுசொல்லி மாயமாய்போய்மறைந்தார்
வாசற்படிதனிலே மன்னனிற்கக்கண்டாளே
ஏறிட்டுப்பார்த்துபோல் இந்திரனார்சீர்வடிவை
அலர்தாமரைநிறமும் பார்பவளச்செவ்வாயும்

மார்பில்பதக்கமும் வச்சிரமணித்தாழ்வடமும்
காதில்மணியழகுங் கட்டழகன்ஒப்பனையும்
உத்தமர்கள்புத்திரன்றன் வுறுமாலைகட்டழகும்
ஒருவர்க்கொருவர் வுகந்துமிகப்பேசினதும்
உத்தாரமுறைகளும் வுறன்முறைகட்டளையும்
மதுரையண்டையாளும் மாதுமைகையில்கொடுத்ததுவும்
மாணிக்கமெத்தைதனிலே மன்னவருஞ்சென்றேறி
வெற்றிலைகள்தின்று விரும்பிவிளையாடினதுந்
தக்கோலந்தின்று குழவிவிளையாடினதும்
மாதுவிடையில்லாமல் மன்னனெழுந்திருந்து
போனதுபோல்கண்டு பொற்கொடியுங்கண்விழித்தாள்
சொற்பனங்கண்டதல்லால் சுந்திரரைக்கண்டதில்லை
என்-சென்மமொழியுமட்டுஞ் சிறையிருக்கநீதியுண்டோ
பெண்ணைச்சிறையிருக்க வைத்தீர்மகாதேவா
இச்சிறைகாக்கவென்னை ஈஸ்வரரேவைத்தீரே
மைத்துனரைத்தானினைத்து வாடமனந்தானுருகி
எக்காலஞ்செல்லுமோ இந்திரரைநான்காண
கண்டவர்களெல்லாங் காரிகைமார்தன்னுடனே
தோழிமார்தன்னுடனே சொன்னேபோயாகில்
என்னாளுமிக்கிளியே என்பார்களேந்திழைமார்
தாமக்கருங்குழலாளுந் தன்மனதில்தானடக்கி
வேல்பொருதுங்கண்ணாளும் விசாரத்துடன்படுத்தாள்

### கலந்தாரி தாதிமார் காற்று ஒடுக்கத்தால்
### வேறொருமண்டபம்போய் படுத்தது.

ஆரணங்குதோழிமா ராயிரம்பேரும்
அம்மானைபந்து மாடுங்கழலாடி
உடனேபள்ளிகொண்டார் வுண்டானதாதியர்கள்
பாதிரவும் பதினைந்துநாழிகைமேல்
வாரியெழுந்திருந்து மங்கையர்களெல்லோரும்
ஒடுக்கத்தினாலே வுள்ளமெல்லாம்வியர்வையிட்டு
அந்தவிடம்விட்டு அப்பாலேமண்டபத்தில்
சித்திரஞ்சேர்மண்டபத்தில் தேன்மொழிமார்போல்படுத்தார்
மண்டபகூடத்தில் மங்கையர்கள்போய்படுக்க
ஒண்டித்தனியாக ஒளிபிறந்தகண்ணாளும்
கட்டார்கருங்குழலுங் கலந்தாரிநாயகியும்
வேல்பொருதுங்கண்ணாள் விசனமாய்ப்பள்ளிகொண்டாள்

### புலந்திரன்கோட்டைக்குள் வருகின்றது.

அந்தசமயத்தில் அழகுபுலந்திரனும்
ஆகாயமார்க்கத்திலே அழகானவான்புரவி

மேலாய்ப்பறந்து வேந்தனதுதன்புரவி
யாருமறியாமல் அங்கொருவர்காணுமல்
ஆறுசுற்றுக்கோட்டைக்குள்ளே அங்கொருவர்காணுமல்
தாதியர்களண்டையிலே தாவியிறங்கியது
ஏறிட்டுப்பார்த்திருந்தா ரிந்திரருமப்போது
ஒக்கபணிபூண்டு ஒருநிறமாய்பட்டுடுத்தி
கூடப்பணிபூண்டு கொம்பனைமார்பட்டுடுத்தி
தேன்மொழிமாரெல்லாஞ் சேரப்படுத்திருந்தார்
அதுகண்டுபுலந்திரரும் ஐயமனதிலெண்ணி
ஆறுயிரம்பேரில் ஆரென்றுநான்கண்டேன்
ஆரென்றுசற்றேநா னாராய்ந்துபார்ப்பேனே
பூவணைமெத்தைகளில் பொற்கொடிமார்படுத்திருக்க
ஆரமுலையாளே யாரென்றுநான்காண்பேன்
எதுக்குஇங்கேவந்தான் என்றுயார்கட்டளையால்
மண்ணுழிகாலமெல்லாம் வையகத்தையாண்டாலும்
பெண்புத்தியிப்போ பிடரியிலேயென்பார்கள்
எதுக்குநம்மையிங்கே இசைந்துவரவிட்டாளோ
நின்றுபுலந்திரரும் நெடுமூச்சைதானெறிந்து
கட்டழகிநாயகியை கண்டதில்லையென்னுளும்
காணுமல்நாமும் கனமதுரைபோனுக்கால்
வாளால்துணிப்பாளே மைந்தனென்றும்பாராளோ
வேந்தர்பெருமாளும் விசாரமிடும்போது

புலந்திரனை புறவியிறக்கிவிட்டது.

அப்போதுதன்புரவி அந்தவிடம்விட்டு
மாதுயிருக்குமந்த வாசற்படிமுன்னலே
கொண்டுவந்துவிட்டது கொற்றவனுர்தன்புரவி
தாழவிரக்கியே தருமர்திருமகனை
மேல்பறந்துநின்றது வேந்தனவன்புரவி

புலந்திரன் கதவைத் திறந்தது.

தாள்பூட்டிருந்ததொரு தையலதுபொற்கதவு
மந்திரவாள்தானெடுத்து வைத்தார்மணிக்கதவில்
தானுய்த்திறந்தது தையலதுபொற்கதவு
மெள்ளநுழைந்தாராம் மெல்லிபடுக்கையிலே

புலந்திரன் பெண்சாதியைக்கண்டது.

வாசற்படிதனிலே வந்துநின்றுமன்னவனும்
வாள்மேலேகையைவைத்து மன்னவரும்பார்த்தாரும்
ஏறிட்டுப்பார்த்தார் இந்திரரும்தேவியரை

மடித்தயிலையிச்சுருளும் வண்ணப்பாளக்காயும்
செம்பொன்றளிகை திருவணைக்கு வைததிருக்க
தங்கப்பதக்கம்வைத்து சந்தனக்கிண்ணம் வைத்து
கெண்டியிலேதண்ணீருங் கிளிமொழிக்குவைத்திருக்கும்
கற்பூரமுத்துக் காராவிநெய்வார்த்து
குத்துவிளக்குக் கொழுந்துபடத்தானேற்றி
இருபுறமுங்குத்துவிளக் கெரியவேயேந்திழைக்கு
பொம்மைப்பதுமைகளும் பொற்கொடியைசூழ்ந்திருக்க
அன்னநடையாட்கு அரும்பதுமைதானிருக்க
வெண்சாமரைவீச மெல்லியற்குபொம்மையெல்லாம்
கட்டழகிநாயகிக்கு கைவிளக்குகொண்டுநிற்க
சொம்பிலேதண்ணீர்கள் சிலர்பொம்மைகொண்டுநிற்க
ஆரமுலையாட்கு ஆலாத்திகொண்டுநிற்க
பொம்மைபதுமைகளை புலந்திரருந்தான்பார்த்து
வரும்போதுசொன்னாளே வையவளநாட்டியரும்
ஆராய்ந்துமெத்தையை அன்புடனேதான்பார்த்து
பார்த்திருந்தோமென்று பதறியெழுந்திருந்து
வாளுருவிகைப்பிடித்து மன்னர்பெருமானும்
மாணிக்கமெத்தையை மன்னவனுஞ்சுற்றிவந்தான்
பொம்மையைக்கண்டானே பின்பொருபெண்ணறியாள்
நீங்களோவென்றுசொல்ல நிற்றிலங்குப்முடியாள்
தானுஞ்சிறித்துமே தனஞ்செயன்கிட்டிவந்தார்
ஏரிட்டுப்பார்த்தாரே இந்திரருநதேவியரை
கொண்டமுடியழகும் கொம்பனையாள்சீரழகும்
பொருந்துமயிரழகும் பொன்பிறைசுட்டிகளும்
கட்டழகிநெற்றியிலே கஸ்தூரிபொட்டழகும்
மாணிக்கம்பின்னவே வைடூரியங்கள்மின்ன
ஆணிப்பொன்னலிழைத்த அன்னத்திருகொப்புகளும்
மாணிக்கவாளு மயிரின்கீழ்சோதிமின்ன
எஞ்சலிட்டகாதுக்கு ஏற்றப்பணிதிகளும்
காரைக்கழுத்தழகும் கட்டுவடந்தன்னழகும்
பாரிய்ரெட்டை பவழத்துத்தாழ்வடமும்
முன்கைமுதாரிகளும் முழுகடகமோதிரமும்
சந்திரகடகமுந் தாயித்திசோதிமின்ன
அஸ்தகடகமும் அழகானமோதிரமும்
பாடகத்தோடும் பணிசிலம்புசோதிமின்ன

காலாழிபீலிகளும் கட்டழகிசேர்வடிவும்
காலைத்தொடாங்கியே கரியகுழல்வளைகளும்
ஏறிட்டுப்பார்த்தாரே இந்திரருடதேவியரை
ஈஸ்வரனார்தேவியவள் ஈஸ்வரியுமீடலவே
மாயவனார்தேவியவள் மாதுமெதிரல்லவே
இந்திரனார்தேவியவள் இந்திராணியீடல்லவே
தாமக்குழலாளை தட்டியெழுப்பினால்
கூவியெழுந்திருப்பாள் கொம்பனைக்கென்னசொல்வேன்
ஓடிவருவாரே உண்டானகாவலர்கள்
வேந்தன்புலந்திரனார் விசாரமிட்டுநின்றாரே

பெண்ணைப் புலந்திரன் எழுப்புதல்.

எப்படியெழுப்பலாம் ஏந்திழையையிப்போது
ரத்தினத்தைவாரி தையலர்மேல்விட்டெறிந்தான்
இல்லென்றுரைக்கத் தேன்மொழியாளப்போது
பல்லியெச்சலிட்டதென்று படுத்தாளே தான்திரும்பி
அப்புறத்துக்கப்புறமாய் அவள்திரும்பி தான்படுத்தாள்
அன்னநடையாது அசையாமல்பள்ளிகொண்டாள்
போரஞ்சாமன்னர் புலந்திரருந்தான்பார்த்து
கண்டாரேயிந்த கட்டழகிநித்திரையை
நாமானலாச்சுது நாயகியாள்நித்திரைக்கு
இன்னொருவரானால் இப்படியேநித்திரைகள்
நித்திரைசத்துருவு என்பதெல்லாங்கண்டோமே
நித்திராதேவியென்னும் நேரிழையே வேண்டினனே
ஒருசாமப்பொழுதிலே நீதம்மேயிருவர்தேன்
ஒருசாமமட்டாய் இருந்தாலினியாடி
வெடியவொருசாமத்துக்கு மேன்மையுடன்போகவேணும்
இரவும்பகலு மினிபிரியோமேந்திழையே
மாதினதுகட்டில்விட்டு மங்கைநீபோய்வா
இன்றையராவிக்கு இடந்தாவேண்டுமென்றான்
நித்திராதேவியவள் நேரிழையாள்தான்பார்த்து
பூவணையைவிட்டு பொற்கொடியுந்தானிறங்கி
மங்கையர்கள்பள்ளிகொள்ளு மண்டபத்துக்குட்புகுந்தாள்
நித்திராதேவியவள்நேரிழையாள்போனபின்பு
போரஞ்சாமன்னர் புலந்திரவீரியரும்
தேவிமுகம்பார்த்து செம்பொன்முடிமானும்
தேவேந்திரபகவான் திருநீற்றைத்தூவினனே
மந்திரவாளாலே மன்னவனுந்தட்டினனே

காந்தாரிபுலந்திரரைக்கண்டது.

சற்றேதான்தட்டனுமே தாமக்குழலாளும்
பொட்டெனவேகண்விழித்து பொற்கொடியுந்தான்பார்த்தாள்

உள்ளம்நடுநடுங்கி உடம்பெங்கும்விடவிடென்று
ஆரமுலையாட்த அடித்தொடையுங்கால்நடுங்கி
பூவணையைவிட்டுமே பொற்கொடியுந்தானிறங்கி
மாணிக்கத்தூணருகே மயில்போலேநின்றுளே
எறிட்டுபார்த்தாளே இந்திரனுர்சீர்வடிவை
அங்கராயனென்பார் ள் அவரல்லகாணுமென்பாள்
அம்மான்மாரென்பார்கள் அவரல்லகாணுமென்பாள்
காடுறைந்தபாண்டவர்கள் காவலர்களாணுக்கால்
மாலைமுடியாரென் மாமன்மார்வந்தாரோ
அங்கவர்காணுமவள் அல்லவென்றுதான்பார்த்தாள்
முடிபணியும்பாண்டவர்கள் முதுகாயிருப்பார்கள்
ஏதோஇவரும் இளசாயிருக்கிறுரே
எண்ணப்பிராயமது இருபத்துகாண்கிறதே
வாலைப்பிராயமது வயதுபதினுரிருக்கும்
வந்தாரொருவராய் மாளிகைக்குள்ளாக
தாதிமாரில்லாமல் தனியேயிருந்தேனே
வந்தவரிங்கே வலியபிடிக்கவந்தால்
நாயகனுர்தாமெகிரில் நாக்கைபிடுங்கிகொள்வோம்
மாளும்படியொழிய மண்ணிலிருப்பதில்லை
கற்கட்டைமுத்திரையும் கர்னனிடகாவலெல்லாம்
இத்தனையுந்தானடந்து யிங்குவந்தாராரோதான்
வாசற்போயவரையும் வதைசெய்துவந்தேனே
மாலைமுடியாளும் மதிலேறிவந்தேனே
ஆருமறியாமல் அரண்மனையில்புகுந்தானே
ஏறிட்டுப்பார்த்தாரே யிந்திரனுர்சீரழகை
வாசற்படியிலே மன்னவனுந்தானிருந்தார்
வாள்மேலேகையை மன்னவரும்வைத்திருந்தார்
முத்தினுநூமாலை முடிமேலேகட்டிருக்க
கட்டழகன்நெற்றியிலே கஸ்தூரிபொட்டுமிட்டு
இட்டதிருநீறும் இருகாதுதன்னழகும்
பூவிட்டகச்சையின்மேல் பொற்சட்டையுஞ்சொருகி
சொருகியபட்டைத் தவளத்திருவழகும்
சருவிகிலாவை சரிபிடிக்குங்கண்மலரும்
மார்பிற்பதக்கமும் வச்சிரமணிதாழ்வடமும்
தாலிபதக்கமுஞ் சன்னல்பின்னல்தாழ்வடமும்
ஆரப்பதக்கமும் அழகுசரப்பளியும்
செம்பொன்பதக்கமுஞ் சேத்தசரப்பளியும்
முன்கைமுகாரியும் முழுச்சடகமோதிரமும்
முத்திரைமோதிரமு முன்கைக்கடகங்களும்
கச்சைகட்டுமென்மருங்குங் கத்திசொருகழகும்

கேளாதுபோலே கேட்டிருந்தார்புலந்திரனும்
மற்றுமிளங்கொடியாள் மயிலனையாளேதுசொல்வாள்
ஊமைச்செவிடோ உணர்வில்லாவீரியரோ
செவிட்டுப்படுவாரோ திறமையில்லாமன்னவரோ
காதுக்குக்கேட்கிலையோ கன்னியாள்சொல்லுமது
என்னைப்பொருகேகண்டாயோ என்னழகுசிந்திவிட
என்னஅழகென்று யித்தூரங்கண்டுவந்தாய்
சிதைபடாத திருவழகுபடைத்தேனே
அகலிபடாத ஆணழகுபடைத்தேனே
வாழ்ச்சிறைபிருக்க மனைதேடிவந்ததென்ன
வந்தவரானாலும் வாய்திறந்துபேசாமல்
மவுனமாய்ப்பிருந்தால் வாளுக்கிரையாய்விடுவாய்
ஆர்பெற்றபாலகனே அன்னிதமாய்மாளவந்தாய்
போடாநீயெழுந்திருந்து பொற்கதவைத்தாள்பூட்ட
எழுந்துநடமன்னவனே என்கதவைத்தாளிலைய
அப்படியும்பேசாராம் அழகுள்ளஇந்திரனார்
பேசாமல்தானிருக்க பெண்கொடியுங்கோபித்து
மன்னன்முகம்நோக்கி மடந்தையரும்கூறுகிறாள்
தாரார்புகழுடைய தருமர்மருமகள்தான்
வெற்றிமதயானை வீமர்மருமகள்நான்
ஆணழகுமன்னன் அர்ச்சுனர்மருமகள்தான்
யிரட்டையவர்மருமகள்நான் திட்டமுடன்சொல்லுகிறேன்
ஆணைமேலேகெட்டவர்கள் ஆருமில்லைவயகத்தில்
பெண்களால்கெட்டகதை புன்னியரேசொல்லுகிறேன்
ஸ்ரீராமர்தேவியவள்சீதையென்னும்பெண்ணரசை
தென்னிலங்கைராவணனுஞ் சிறையெடுத்தான்மாபாவி
இராவணனுஞ்சிறைபிடிக்க இராமர்வெகுகோபமதாய்
இலங்கையைத்தானழித்து இராவணனைக்கொல்லலையோ
பெண்ணாலேமாண்டானே பேரானராவணனும்
என்னாலேநீமாள முன்னாள் தலைவிதியோ
என்னாலேநீமாண்டால் உன்னைப்பெற்றவளோ
பெண்டிருந்தாள்வாடாளோ புத்திகெட்டமன்னவனே
போடாநீமன்னவனே புறப்பட்டுவழிதேடி
அவ்வார்த்தைசொல்லியும் அதற்குமவர்பேசாராம்
கல்விமனதுடையாள் காரியத்தைப்பார்ப்போமென்று
மனைவிமனமறிய மெள்ளமாய்த்தானிருந்தார்
கட்டழகிமாதுநல்லாள் காந்தாரியேதுசொல்வாள்
சாவலைத்தாண்டிவந்த கட்டழகாமன்னவரே
காவலர்கள்கண்டாலே கத்திக்கிரையிடுவார்
போர்க்கருணர்கண்டாலே போடுவார்பொலியாக

திருவழகும்பாவனையுஞ்சித்திரமென்றுவந்தாயோ
வேண்டுமென்றுசொல்லி விரும்பித்தவம்பண்ணி
மாதவத்தாற்பெற்றெடுத்த மாதாவறியாளோ
உன்-ஆச்சியறியாமல் அரண்மனைக்குவந்தாயே
ஆருமறியாமல் ஆணழகாவந்தாயோ
வந்தவரலாற்றைவாய்திறந்து சொல்வாய்நீ
ஏதுக்குஇங்குவந்து இறக்கிறாயுன்னுயிரை
குலமாதருக்காக குடியிழந்தார்பெத்தவுண்டு
கருமமுடியானே தருமமாய்ச்சொல்லுகிறேன்
தேவிக்காய்பாண்டவர்கள் தேசத்தில்கோடியுண்டு
உத்தமனேவீரியனே உன்னுயிரிழந்ததென்றால்
தேவியரைக்கொள்ளுவாய் சிறுவரைப்பெற்றிடுவாய்
குலமாதர்தாமொழிய விலைமாதராகாதோ
விலைமாதராகாதோ வேறொருத்திகிட்டாதோ
கொம்பேரிடையானே கோவலிலேதேவடிமார்
அதிலொருத்தியாகாதோ அதிசயமுள்ளவனே
நூலால்கடுந்திறளார் நூற்றொருவர்கண்டாலே
மாலைமுடியானே வதைசெய்துபோட்டிடுவார்
காசிவளநாட்டாருங் கர்ணருன்னைக்கண்டாக்கால்
ஏடல்லோதாரனவன் இரும்பிளவாய்ப்போட்டிடுவான்
காடுவறந்தபாண்டவர்கள் காவலர்கள்கண்டாக்கால்
மாலைமுடியானே யவனமாமன்னர்கண்டாக்கால்
வெற்றிமதயானை வீமனிருந்தாக்கால்
செம்பொன்திருமுடியை தெண்டிக்கிறையிடுவார்
வயிரத்திருமுடியை வாளுக்கிறையிடுவார்
வெட்டிப்பிளந்திடுவார் வீமனதுதண்டாலே
அதுவுந்தானல்லாமல் அரசாளும்நாயகியாள்
அல்லிமலரிலே அவதரித்தபெண்பெருமாள்
மீன்முகனைக்கொன்று வில்பெற்றபெண்பெருமாள்
அரசாளும்நாயகியாள் அல்லியென்மாமியார்
ஆரவிளமுலையாள் அறிந்தாளேயாமாகில்
வாளாலேவெட்டி வருந்திடுவாளென்மாமி
கூறுபங்குபோடுவாள் கொம்பனையாளென்மாமி
ஆரோயிவளென்று ஆகடியம்பேசாதே
வேறொருத்தியென்றுசொல்லி வீம்புகளைப்பேசாதே

இந்தவகைப்பெயரும் பேங்கிழைமே சொன்னையே
கொண்டவர்கள்பெயரோ கொடுத்தவர்கள்தன்பெயரோ
எவர்களதுபெயரோ எனக்கசரியச்சொல்லுமென்றார்
கொடுத்தவர்கள்பேர்சொன்னால் கொண்டவர்பேர்சொல்லுமென்றார்
அவ்வார்த்தைதா கேட்டு அருங்கிளிபுமே துசொல்வாள்
சொல்லுகிறாள்மாது துலங்குநவமணிபோல்
தாரார்புகழுடைய தருமரைவர்பாண்டவர்கள்
வெற்றிமதயானை வீமன்மகாராசன்
நகுலசகாதேவரென்னும் நலம்புகழ்பாண்டவர்கள்
மாமன்மாறைந்துபேர் மாமியாரேழுபேர்
துரௌபதைசுபத்திரையும் தோகைபவளக்கொடி
நாககன்னிபோகவதி நறுநுதலாள்நின்னெளியும்
அல்லிமலர்தனிலே அவதரித்தபூவைநரும்
எந்தனுக்குமாமியார் யெழுந்துநடமன்னவனே

கலந்தாரியைபுருஷன்பெயர்சொல்லுமென்றது.

கேட்டுப்புலந்திரரும் கிருபையுடனேதுசொல்வார்
இப்போதெரிந்தது பேங்கிழைபெண்ணணங்கே
மாலையிட்டபுன்புருஷன் மணவாளன்பேர்சொல்லுமென்றார்
வணவாளனென்று சொல்ல மனது கிகத்தளர்ந்து
துக்கித்துப்பெண்மயிலுஞ் சொல்லநடுநடுங்கி
சொன்னால்தான்போவான் சுந்தரப்பூமுடியான்
என்றுபிளமுலையாள் யெடுத்துரைப்பாள்மன்னவற்கு

கலந்தாரிபுருஷன்பெயர்சொன்னது.

கேளுங்காண்மன்னவரே கிளிமொழியாள மணவாளன்
இந்திரனென்புருஷன் என்பேர்கலந்தாரி
இப்பவென்றால்தெரிந்ததோ யெழுந்துநடவுமென்றாள்
பேரஞ்சாவீரன் புலந்திரருங்கூறலுற்றார்
இந்திரனென்றேயே யிருவண்டுராச்சியத்தில்
அண்டத்துயிந்திரனே ஆகாயயிந்திரனே
வேர்பிரித்துச்சொல்லுமென்றார் வேந்தர்பெருமானும்
காரிழையாள்மாது கலந்தாரியேதுரைப்பாள்
ஆகாயயிந்திரனர் அவரிடதேவியென்றாள்
அர்ச்சுனனீன்றெடுத்த அழகுள்ளயிந்திரனர்
போர்க்கஞ்சாமன்னன் புலந்திரவீரியனர்
அவரிடதேவியென்று அறியவுரைத்தாளே
அத்திபுரமு மிடங்களுமென்னுமென்றாள்
தென்பாண்டிநாடுஞ் சேரவேயென்னுமென்றாள்
செம்பொன்படிந்துரையும் தீவுகளுமென்னுமென்றாள்
பவளம்படிந்துரையும் பட்டணமுமென்னுமென்றாள்

ஐவரும் நூற்றுவரும் அன்புடன் வாழுகையில்
கொற்றவர்கள்யாவருங் கூடியிருக்கையிலே
மகாராசராசரவர் மருமகள்வேண்டுமென்று
வையகத்தையாண்டாட்கும் மருமகள்வேண்டுமென்று
சரிபொத்தசம்பந்தந் தையானல்லாள்வேண்டுமென்று
மாலையிட்டாரெத்தனை வளநாடியிந்திரற்கு
திரும்பிப்பகைபார்சு தென்னவர்க்கும் நூற்றுவர்க்கு
பாண்டவர்களைவரும் பாரவனப்போனபின்பு
அன்றுமுதலின்றளவும் அழைத்துவரயாருமில்லை
மாலையிட்டுக்கொண்ட மணவாளன்மைத்துனரும்
மணவாளநாட்டிலே மன்னவருந்தானிருக்க
மைத்துனரைவைத்த வன்சிறைக்காக்கிறேன்யான்
அவர்வைத்தசிறையிலே வாடுகிறேன்மன்னவனே
போரஞ்சாவீரனவர் புலந்திரன்தான்கேட்டு
சிறையென்றுசொல்லுகையில் தென்னன்பெருமானும்
காவலர்கள்வீரனுங் கண்ணிறையுழத்துதிர்த்தான்
அந்தவேளைக்காரனால் அழுதகண்ணீர்தான்துடைத்து

புருஷன்தானென்று புலந்திரன் சொல்லுவது.

போரஞ்சாவீரனவர் புலந்திரனுங்கூறலுற்றான்
காரிழையாள்மாது கலந்தாரிநாயகியே
உன்னைமாலையிட்டுக்கொண்டமணவாளன்யான்காணும்
தாலித்தரித்தவொரு தர்மமகன்யான்காணும்
கொண்டுசிறையில்வைத்த கொற்றவனும்யான்காணும்
மதுரைவிட்டுவந்தேன் மங்கையரேயிப்போது
அருந்தவெழுப்பிவெல்லை அர்சிவாவிட்டாள்காண்
ஆருமறியாமல் அறிவையேயிருந்துவந்தேன்
ஓமப்புகையிலே வுத்தமியேயானிருந்தேன்
தையலேமங்கிலியம் தரித்தவருமியான்காணும்
சந்திரியேயுன்னுடைய சுண்டுவிரல்பிடித்த
மன்னர்பெருமாள் மணவாளர்யான்காணும்
அன்னமேநீயெனக்கு அத்தைமகள்காணும்
காடுறைந்தபாண்டவர்கள் காவலர்கள்தன்மகன்யான்
வேறொருவரென்றுசொல்லி விசனமதுவேண்டாம்
மற்றொருவரிங்கே வருவாரோகாவலிலே
கற்கோட்டையுந்திரையுங்கர்னனதுகாவல்களும்
நாலால்கடுந்திரளார் நூற்றொருவர்காவல்களும்
இத்தனையுந்தான்கடந்து யிங்கேவருவாருண்டோ
அரசாளும்நாயகியா ளல்லித்திருமகன்யான்
ஐவர்பயின்றெடுத்த அழகுள்ளவிந்திரன்யான்
போரஞ்சாவீரன், புலந்திரன்யான்காணும்

ஆரணங்கோனானுக்கு அம்மான்மகன்காணும்
வேறொருவரென்று விகற்பங்களெண்ணாதே

கலந்தாரி அடையாளங்கேட்டது.

என்றுரைக்கமன்னவரும் யேதுரைப்பாள்நாயகியும்
மாதுயெடுத்துரைப்பாள் மைத்துனரைத்தான்பார்த்து
மதுரையிலிருந்துவந்த மைத்துனருமானாக்கால்
மாமியடையாளம் மன்னவரேதாருமென்றாள்
அத்தையடையாளம் அணழகாதாருமென்றாள்
போரஞ்சாவீரனவன் புலந்திரனுங்கூறுகிறான்
வரும்போதுதந்தாள்காண் வையைவளநாட்டாளும்
வையைக்கரைதனிலே வந்துசெபஞ்செய்கையிலே
சிவபூசைசெய்கையிலே தேன்மொழியாளடையாளம்
கட்டழகியடையாளம் கைநழுவிட்டேன்காண்
வையைக்கரைதனிலே வைத்துமறந்துவிட்டேன்
வைத்துமறந்துவிட்டேன் மயிலணையேயென்றுரைத்தார்
மாதுகுழலாள் மைத்துனரைத்தான்பார்த்து
எங்கள்-அம்மான்மார்தன்னுடனே அறிக்கையிட்டுசொல்லவில்லை
காவலர்கள்தம்முடைய கர்னருக்குச்சொல்லவில்லை
சுற்றியருகிருக்குந் தோழியர்க்குச்சொல்லவில்லை
இன்றையராத்திரிக்கு இன்பமுடன்பொறுத்து
நாளையராத்திரிக்கு ராசாவேநீர்வாரும்
மாமியார்க்கையில வாங்கிவந்தாலடையாம்
மாணிக்கமெத்தையிலே மருவயிடந்தருவேன்.

புலந்திரன் அடையாளங்கொடுத்தது.

போரஞ்சாவீரன் புலந்திரனுந்தான்கேட்டு
இவள்சுட்டாணிவார்த்தைகளும்கைநீட்டிப்பேச்சுகளும்
வாய்விளங்கப்பேசுகிற மங்கையரைத்தானபார்த்து
இந்தாருமென்று எடுத்துமவள்கைகொடுத்தார்
கண்டாளடையாளங் கடுகெனவேதான்வாங்கி
உள்ளேநுழைந்து ஒருசொர்புசலமெடுத்து
பூஷணத்தைசுத்திசெய்து பூப்போட்டுதெண்டனிட்டு
அத்தையடையாளம் அன்பாகத்தானெடுத்து
பெட்டியிலேயடைத்து புலந்திரனார்முன்புவந்தாள்
வையைவளநாட்டாளும்மைமறந்தாளோ
திருடிகொண்டுவந்தாயோ தென்னன்முடிவேந்தா
நம்பேனொருநாளும் நாயகனேயுநதனைநான்
மைத்துனர்பொய்யானால் மாணிக்கத்தூண்பிளந்தால்
அத்தைமகனென்று யின்பாயிடங்கொடுப்பேன்
மாதுகலந்தாரி மயிலணையாள்சொல்லுகையில்
போரஞ்சாமன்னவர் புலந்திரவீரியரும்

பார்த்தார்பலகாலும் பாண்டவர்புத்திரரும்
ஆரைநினைத்தானோ ஐவர்திருமகனும்
சோலைமலருடைய சொக்கரைத்தான்நினைத்தான்
நஞ்சையமுதுண்ட நாதரைத்தோத்தரித்தான்
அரனார்செயலாலே ஆரணங்குபொற்றாளு
தாளைவெட்டித்ததுவே தையலதுபொற்றாளு
மாதுகலந்தாரி மைத்துனரைத்தான்பார்த்து
மாமிமகன்மெய்யாலே மதிலோடிகற்கோட்டை
எட்டியேதானடந்தார் விரக்கயிடந்தருவேன்

புலந்திரன்கோட்டையைக் கடக்கவைத்தது.

மாது அவளுரைக்க மன்னவரும்போதுசொல்வார்
அட்டாளுஞ்சொக்கரென்றும் ஐயரைத்தான்துதித்தான்
காமனைக்கண்ணாலெரித்த கர்த்தரைத்தான்துதித்தான்
அப்படியேகடந்து அவளுடையசற்கோட்டை
எட்டிநடந்ததுவே இருப்பிடத்திற்சேர்த்ததுதே
அப்படியும்நப்பனில்லை ஆரவிளமுலையாள்
போர்க்கஞ்சாமன்னர் புலந்திருப்பீரானல்
வாசற்படிதனிலே மணிப்பதுமைகட்டிருக்கும்
மணிப்பதுமைவாய்திறந்து மன்னவரேசொன்னைக்கால்
மருவவிடந்தருவேன் மைத்துனரேயென்றுசொல்லி
இல்லாமற்போனுக்கால் சொல்லாமலெழுந்துநட

புலந்திரன்மணிப்பதுமையைப்பேசவைத்தது.

அவ்வார்த்தைதான்கேட்டு அழகுள்ளஇந்திரனார்
விலங்குக்குட்டுக்கும் வெட்டுண்டுசாகாமல்
அறியாமலிங்குவந்தேன் ஆரணங்குகோட்டைக்கு
ஆரைநினைத்தாலும் அளவற்றசிந்தையிலே
பிட்டுக்குமண்சுமந்த புனிதரைத்தான்தொழுதான்
காலனைத்தானுதைத்த கர்த்தரைத்தான்தொழுதான்
சொக்கரைத்தானினைந்து தொழுதானேதர்வேந்தன்
பாண்டிகிருபையினால் மணிப்பதுமைவாய்திறந்து
சொல்லுகிறதுமணிப்பதுமை சொக்கர்கிருபையினால்
தருமர்திருமகன்காண் காரார்கருங்குழலே
கூடமருவிடுங்கள் கொற்றவருந்தேவியுமாய்
சொல்லுகிறதுமணிப்பதுமை சொற்கிளிபோல
காதாரக்கேட்டாளே கலந்தாரிநாயகியும்
மந்திரக்காரனோதான் மலையாளவித்தையுண்டோ
ஏமாத்தவந்தவனோ ஏதுமறிகிலனே

கலந்தாரி துணைவரவழைத்தது.

எண்ணுதுபெண்ணி இளங்கொடியுமேதுசெய்தாள்
பத்தினியுநானனல் பார்த்தன்மகனுக்கால்

மாணிக்கத்தூணே வாருமென்றுதானழைத்தாள்
மாணிக்கத்தூணும் வந்துவிளங்கதுகாண்
மாமியடையாளம் மங்கையரும்கட்டிவைத்து
மாலையிட்டுக்கொண்ட மணவாளனிவரானால்
பெட்டியும்பேழையும்போய் பொருந்துமென்றாள்பொற்றூணை
பேழையானதூணிலே போட்டடைத்தாயடையாளம்
ஆகாயவாணிகளும் அருந்துதிசாட்சிவைத்தாள்
பூமிதேவிஅம்மாள் பூவிளக்கேநீர்சாட்சி
அக்கினியேநீர்சாட்சி ஆதிசிவன்நீர்சாட்சி
மெய்யானசாட்சிகள் மெல்லியரும்வைத்தபின்பு

கலந்தாரி புருஷனென்றறிந்து பள்ளியறைகூட்டிபோனது.

அஞ்சிநடுநடுங்கி அத்தைமகனென்மறிந்து
ஆறுதப்புநூறுபிழை அடியாள்நான்செய்ததெல்லாம்
கோடிதப்புநூறுபிழை கொற்றவரேகொண்டணையும்
போரஞ்சாமன்னன புலந்திரனுங்கூறுகிறான்
ஆருமறியாமல் ஆச்சிவரவிட்டாள்காண்
வாறுமென்றுசொல்லி வர்ணவிரல்கைப்பிடித்து
செம்பொன்கதவடைத்துச் சிக்கெனவேதாள்பூட்டி
சாளரவாசல்களை தனித்தனியேதாள்பூட்டி
மங்கையரைக்கொண்டு மாளிகையினுள்நுழைந்தார்
மாணிக்கக்கட்டில்கள் மாமன்மார்போட்டதினால்
அடுக்கிருக்கும்பஞ்சணைகள் அரிவையரேயாகாது
கொண்டுவந்தேன்பூமெத்தை கொம்பனையேகூடியிருக்
பூமெத்தைப்போட்டாராம் பொருந்திவிளையாட
மல்லிகைமெத்தையிலேமாதரைக்கொண்டு
மாதரைப்புல்கி மூடிபேலேகுந்தவைத்து
ஆரந்திருத்தி அழகுபணிதான்பூண்டு
கோர்வைதிருத்திக் குழற்கோதிகொம்பனைக்கு
வாளிதிருத்திமயிர்கோதி மங்கையர்க்கு
ருப்பியில்சார்ந்துங்குழாயில்புநுகணிந்து
தேவியையலங்கரித்துசெம்பொன்மணிமுடியான்
தாமுமணிந்துகொண்டு தாமந்தவாழ்மார்பன்
வாய்த்தயிலைச்சுருளும் வர்ணப்பழக்காயும்
பண்டுபலர்திகளும் புழுங்கள்ரசக்கனியும்
மடித்தயிலைச்சுருளும்மாதருக்குதான்கொடுத்தான்
தாமுமிலையடைக்காய் தின்றுதனஞ்செயனார்
மாதுமுகம்நோக்கி மன்னனெடுத்துரைத்தான்
மங்கையரைமீறி வளர்ந்துசமைந்திருக்க
இங்களொருக்கால் தேன்மொழியேயுழுகிறையே

மங்கையரேநீருமிங்கே வாழாதிருந்ததெல்லாம்
அந்தப்பாவங்களெல்லாம் அம்மான்பார்தன்னோடே

புலந்திரனும் பெண்சாதியுங்கூடினது.

வெற்றிலைதின்று விரும்பிவிளையாடி
தென்மதுரைராமருக்குச் சீதைவந்துவாய்த்ததுபோல்
கந்தருடன்வள்ளியம்மன் கைகலந்தபாவனைபோல்
சீராவையொடுசெர்ப்பம் சருவிப்பிழைத்தாப்போல்
தேவியுடனே இருந்தடைக்காய் தின்றிருந்தான்
பூவணையைவிட்டுப் பொற்கிளியுந்தானிறங்கி
கவரிகொண்டுவீசலுமே கண்டெளிந்துகண்விழித்தான்
பலகாலுந்தன்னைப் பழகினவள்போலே
அருகாகவெண்கவரி ஆரணங்குவீசுகிறாள்
இவ்வாறமுதனொத்த இணங்கைகள்நோகாதோ
அநேகநெடுநேரம் இருந்துவிளையாடி
காரிகையாள்மாது கஸ்தூரிநாமமிட்டாள்
மல்லிகைமெத்தையை மயிலிணையாள்விட்டிறங்கி
காலோடுகைகழுவி கனிவாயுங்கொப்பளித்து
வாயோடுபல்லுகளும் மதிமுகஞ்சுத்திசெய்து
மைத்துனரைப்பார்த்து மாதுயெடுத்துரைப்பாள்
தக்கப்புகழுடைய தருமர்பெயராலே
நானுமொருபொருளைப் யாசகமேவந்தீரோ
பாண்டிப்பெருமானே பசியோடிருக்கிறீரோ
பசிக்குது தன்னுமென்று பாவித்தாள்பைங்கொடியும்
பொற்றளிகைவிட்டுப் பொற்கிளியுமுன்னேவந்தாள்
பொற்றளிகைதானும் புசித்துமே அப்போது

இருவருக்கும் வாது.

போரஞ்சாவீரனவர் புலந்திரனுக்குரைக்கிறான்
சோதையுடன்கூர்ந்து கொற்றவனோதுசொல்வார்
மானேயிளங்கொடியே மயிலேமாதேகேளாய்
சகுனிபடுபாவி சண்டாளன்வாசலிலே
மாதைத்துகிலுரிந்த மாபாவிவாசலிலே
கச்சாயந்தின்பதில்லை கன்னியிளமயிலே
வெற்றிமதயானைவீமரது சண்டாலே
நாலால்கடுந்திறலார் நூற்றொருவர்பூமுடியை
வெட்டிபலியிடுவார் வீமரதுதெண்டாலே
பாரதமுடிந்துவுங்கள் பார்வேந்தர்மாண்டாக்கால்
ஆரணங்கேயுன்னுடைய அம்மான்மார்மாண்டாக்கால்
மாமியார்வீட்டிலே வரப்போகவிருக்கிறது
மாமியார்வீட்டிலே மருவுண்டிருக்கிறது
பாண்டவர்நாடுபெற்று நாமும்பயந்தெளிந்து

கொற்றவர்கள்நாடுபெற்று நாமும்குறைநீங்கி
மாலைமுடிபாண்டவர்கள் வந்தபிறகாக
வண்டார்குழலாள் மயிர்முடித்தபின்பாக
கச்சாயந்தின்று கலந்துறவாடுவதும்
என்றுரைக்கமன்னர் ஏந்திழைதானழுதாள்
தேவியழும்போது தேர்விஜயன்புத்திரனார்
மாமன்மார்மாண்டாரென்றுமங்கையரேநீயழுதால்
உன் அம்மான்மார்செய்த அக்கிரமம்நீர்கேளாய்
உருவமதயானை உத்தமர்களைவரையும்
விருந்துமருவென்றுசொல்லி வேந்தரைதானழைத்து
வலுவிலேதானழைத்து மாயத்தால்சூதாடி
சகுனியால்சூதாடி தருமாபுரந்தோற்று
எத்தேசப்புந்தோற்று இருப்பிடமுந்தான்தோற்று
யானைகளுந்தேருகளும் அணிமணிச்சிங்காதனமும்
முத்துமுடியுமுறுதுவளச்செவ்வாயும்
நாடுமிகத்தோற்று நால்வரையுந்தான்தோற்று
வித்தகனார்பாஞ்சாலன் பெற்றவிளக்கொளியை
கொற்றவர்கள்பாண்டவர்கள் கொண்டகுலவிளக்கை
மாதரையும்வைத்து மன்னவர் ஏதோற்றார்கள்
தாமக்குழலாளை தள்ளிவந்தானம்பலத்தில்
வேல்பொருதுங்கண்ணாளை வீதிநடக்கவைத்தான்
ஐலர்மணியாளை அங்காடிநடக்கவைத்தான்
அன்னநடையாளை அம்பலத்திலேற்றிவைத்தான்
சொல்லாதுஞ்சொல்லி துகிலுமுறியவைத்தான்
பாஞ்சாலன்புண்ணியத்தால் பாண்டவர்கள்புண்ணியத்தால்
மாளாதேவளந்தது மாதுதுகிலாடை
சற்றேநழுவியே உடைகுலைந்தாளாமாகில்
வெற்றிமதயானை வீமரதுதெண்டாலே
மாள்கிறதுஅன்றல்லோ மாமன்மார் நூற்றொருவர்
சாகிறதுஅன்றல்லோ தனஞ்செயன்கையம்பாலே
மாமன்மார்பட்டாரென்று மங்கையரேநீயழுதாய்
ஏலங்குழலாளே எனக்குதுக்கம்வாராதோ
தம்மாணையென்றனே தருமமுடியழகன்
தையலவள்கேட்டு தரியாளேபூமியிலே
பூவணையைவிட்டிறங்கி புனங்கிளிபுமப்போது
இதுவுமொருகாரியம்போல் இவ்வாணைதந்ததென்ன
ஆணைவிடுமென்று அடிவணங்கிகெண்டனிட்டாள்
வந்துவிழவொட்டாத மன்னரெடுத்தணைத்து
விட்டேனேயாணையெல்லாம் வேல்பொருதுங்கண்ணாளே
ஆரமுலையாட்கு அடைக்காய்சுருள்கொடுத்து

பொற்கொடியேயெந்தனுக்குப் போகவிடைதாருமையா
விடையென்றுகேட்கயிலே வேந்தன்மனையாட்டி
போகவேவந்தீரோ புதுமைகளைக்காட்டவந்தீர்
காவலழிக்கவந்தீர் கட்டழகர்மன்னவரே
காரியங்கள்பார்ப்பதற்குக் காவலரேவந்தீரோ
மதுரையைநானறியேன் வைகைவளநாடறியேன்
வாழுமதுரையென்று வரிசைகளுநானறியேன்
சீரானமதுரையென்று சிலைகளுநானறியேன்
முத்துப்படுந்துறையும் முடியரசிபட்டணமும்
பட்டுப்படுந்துறையும் பட்டணமுநானறியேன்
சித்திரச்சாலைகளுந் தாமரைப்பொய்கைகளுந்
சித்திரஞ்சோலைகளுந் திருவாலவாயறியேன்
பெண்ணாய்ப்பிறந்து பெருமாள்முடிசூட்டி
அன்னம்போலாண்டாளே ஐம்பத்தறுகாதம்
என்றுசொல்லக்கேட்டிருப்பேன் என்கணவாநானறியேன்
பார்க்கவேநான்வருவேன் பாண்டிவளநாட்டை
இருவருமொன்றாய் எடுக்காதோயிப்பாவி
வருகிறேநானுங்கள் வைகைவளநாட்டுக்கு
காணவருகிறேன் காவலரேகூடவென்றாள்
போரஞ்சாமன்னர் புலந்திரருமேதுசொல்வார்
அறிவென்றெனையறியாய் அரிவையிளமயிலே
மதுரைதுரையாளுகிற மாதவையோன்புத்திரனு
போரஞ்சாமன்னன் புலந்திரர்வீரியற்கு
ஆனந்தமார்பனுக்கு அடைப்பம்பிடிக்கிறவன்
அந்தவடையாளஞ்சொல்லி அணைந்தேனேயிப்போது
மெய்யாய்நீரென்பிறகேசொல்லியேபின்தொடர்ந்தால்
வருபோடிமங்கையரே காரார்கருங்குழலே
அவ்வசனங்கேட்டு அரிவையெடுத்துரைப்பாள்
மைத்துனரைத்தான்பார்த்து மாதுமெடுத்துரைப்பாள்
வந்தவொருபூவனைக்கு மருவியுறவாடி
வந்தபொழுதே மணவாளர்நீர்காணும்
நகைநகைத்தாரிந்திரும் நாயகியாள்சொல்லுகையில்
போர்க்கஞ்சாவீரன் புலந்திரனுங்கூறுகிறான்
கற்கோட்டைமுத்திரையுங் கர்னதுகாவல்களும்
இத்தனையுந்தான்கடந்து இங்கேவருவாருமுண்டோ
மதுரையைவிட்டுவந்த மணவாளநான்காண்டி
காரிழையேயுன்னை களவாகக்கொண்டுசென்றால்
தேடித்திரியாரோ சேனைகளத்தனையும்
மாலையிட்டுக்கொண்ட மணவாளனனல்லோ
தாலிதரித்தவொரு தருமர்மகன்யானல்லோ

களவாகக்கொண்டுசெல்ல காரியமேன்நாயகியே
நாளைபாரதமுடித்து படுகளமுஞ்சென்றக்கால்
மங்கையரேவுன்னுடைய மாமன்மார்மாண்டாக்கால்
பாண்டவர்கள்நாடுபெற்று பதியமர்ந்தபிற்பாடு
மன்னவர்கள்நாடுபெற்று வந்தபிறகாகாதோ
வண்டார்குழலாளு மயிர்முடித்தபிற்பாடு
அப்போதுதண்டிகையும் ஆளும்வரவிடுவேன்
உன் மைந்தனுநீயுமாய் வாருமென்றுதானுரைத்தார்
காரிழையாள்மாது கலந்தாரிதான்கேட்டு
எனக்கு-மைந்தனுமுண்டாச்சோ மன்னர்பெருமானே
பிள்ளையுமுண்டாச்சோ பேர்பெரியமன்னவரே
போர்க்கஞ்சாவீரனவர் புலந்திரனுமேதுசொல்வார்
உங்கள்குலம்போலேயல்ல ஓடமலர்க்கண்ணுளே
ஆண்மலடுபெண்மலடு அடங்கலுந்தான்மலடு
கண்ணிலான்பெற்றெடுத்த கபடரெல்லாந்தான்மலடு
எங்கள்குலங்கேளாய் இளங்கொடியேசொல்லுகிறேன்
தேர்விசையனருச்சுனனார் தெருவழியேவரும்போது
முன்னழகுகண்டு மொய்குழல்மார்சோர்ந்திடுவார்
அப்போதேகெர்ப்பம் அடையுங்காணாரணங்கே
வந்தொருபூவணையில் மருவிவிளையாட
எனக்குமைந்தனில்லையென்றால் வையகங்களேசாதோ
பிள்ளையில்லையென்றால் பூதலத்தாரேசாறே
பேடைமலர்கண்ணால் பெறுவதுஆண்பிள்ளை
உன்அம்மான்மார்பெயரை ஆரணங்கேவையாதே
எங்கள்ஐவரதுபெயரை இடவேண்டுமாரிழையே
ஆணழகர்ஐவரிலே அர்ச்சுனனென்றழையும்
சித்திரவில்வீரனவன் சின்ன அர்ச்சுனனார்
அப்படியேயாகுதுகாண் ஆணழகாமன்னவனே
விடிந்துவருகுதடி மெல்லியிளங்குயிலே
பொற்கொடியேயெந்தனுக்குப் போகவிடை தாருமென்றார்
விடையென்றுகேட்கையிலே வேல்போருதுங்கண்ணாளும்
மைத்துனரைத்தான்பார்த்து மாதுமெடுத்துரைப்பாள்
தாதியர்களறியாமல் தார்வேந்தர்வந்நீரோ
பிஞ்சுமணிமுடியாள் புத்திரரேயுண்டானால்
பொல்லாமசக்கையது பொருந்திற்றேயாமாகில்
அம்பலத்தாரெல்லாம் அறிந்துவிட்டாராமாகில்
என்னசொல்வேனானும் என்மாமார்நூற்றுவர்க்கும்
மாமியடையாளம் மன்னவரேநீர்கொடுத்தீர்
உம்முடையடையாளம் வுத்தமரேதாருமென்றாள்
தருவீரெனமறுத்தசுள் தாமக்குழலாளும்
போரஞ்சாமன்னர் புலந்திரருந்தான்பார்த்து

எண்பத்தெண்ணாயிரம்பேர் இளங்கொடிமார்தானுமுண்டு
கொம்பனைமார்தங்களுடன் கூடக்கொலுவிருப்பேன்
சல்லாபம்பேசியேதான் சரசங்கள்செய்யவந்தால்
தங்கைதமக்கையென்பேன் தையலர்கள்யாவரையும்
ஆண்டவர்கள்நாடுப்பெற்ற பதியமர்ந்தபிற்பாடு
வண்டணியுங்குழலாள் மயிற்முடித்தபிற்பாடு
உண்பதுந்தின்பதுவும் ஒண்மாளிகையிலேறுவதும்
அன்னாளாம்பந்தரசே ஆனைக்குதான் நரைத்தார்
விடிந்துவருகிறது விஜையன்மருமகளே
போகவிடைதாருமென்றார் புலந்திரனைப்போது
விடையென்றுகேட்கையிலே வேல்புருவக்கண்ணாளும்
மாதமொருபயணம் வருவீரோமன்னவரே
சொல்லுமென்றுகேட்டால் சொர்ணப்பசுங்கிளியும்
ஒருநாளும்பொய்யாத் தையுரையாதவுத்தமனும்
எங்கள்ஆச்சிக்குச்சொல்லி அறிக்கைவிட்டு அப்படியே
மாதமொருமுறைதான் வருகிறேன்தப்பாமல்
விடையென்றுகேட்கையிலே மெல்லிகருங்குழலாள்
வெள்ளைவிட்டிறங்கி பொற்கொடியாள்நாயகமும்
மாமத்தவிக்கசுருளும் வர்ணத்துவர்பாக்கும்
காவலனார்வீரியற்கு கைநிறையஅள்ளிவிட்டால்
வெகுவால்லவோ கொடுப்பவளையமிர்தம்
வலக்கருங்குழலே இதுக்கொள் நம்யானறியேன்
கொம்பனையர்களுங் குடியிருந்துகாத்திரோ
இந்நாட்டுவாசனைகள் யேந்திழையேயல்லியது
இந்திரலோகத்தில் இருந்துவந்தவாசனைகள்
ஆசையினாலே அரசியேநான்கொடுத்தேன்
பொற்கொடியேயெனக்குப் போகவிடைதாருமென்றார்
தாரார்கருங்குழலாள் சரணமென்றடிபணிந்து
ஆறிரவருக்கும் அவருடையதேவியர்க்கும்
பொன்னின்மலைநாடாளும் போரெழுதிஜவருக்கும்
வையமுழுதாளுகின்ற மாமியார்தங்களுக்கும்
தெண்டனிட்டுவிண்ணப்பஞ் செப்புவீரவர்களுக்கும்

புலந்திரன்மதுரைக்குப் பயணப்பட்டது.

என்றுசொல்லமாதுநல்லாள் இந்திரருமனமகிழ்ந்து
சிங்காதனத்தைவிட்டு திகழக்குதித்திறங்கி
மன்னருமுன்னடக்க மாதரும்பின்னடக்க
ஆகாயவான்புரவி ஆலதாரன்முன்புவர
வானப்புரவியிது வந்ததுமன்னவன்முன்
புரவியழகனவன் புகழ்வீரன்பேரழகன்
மதுரைமணவாளன் வந்தபடிவாராதே

என்றுமவள்கூறி இரங்கியேதெண்டனிட்டாள்
தேவியென்றன்முகத்தை திரும்பியவர்பார்த்து
அங்குபடிகாலைவைத்து ஆனந்தவாழ்பார்பன்
ஏறினாப்பொழுது இளவிசையன்புத்திரனும்
உத்தமர்கள்புத்திரனும் உதாறிச்சுஏறினனே
ஏறினதுகண்டாளே இந்திரரைத்தான்காணுள்
மைத்துனரைப்போகவிட்டு வாடிமனந்தளர்ந்தாள்
வாடிமனந்தளர்ந்து வர்னமுகம்வேறுபட்டு
பள்ளிகொள்ளுமண்டபத்தில் பைங்கிளியுந்தான்புகுந்து
கூடியிருந்தோமே குங்குமக்கட்டிலிலே
ஏறியிருந்தோமே யெழில்பெரியமண்டபத்தில்
இன்னமுறை இனிகாணப்போவதுண்டோ
என்று-செம்பொன்கதவடைத்து சிக்கெனவேதாள்பூட்டி
பூவணைமேலேறி பொற்கொடியும்பள்ளிக்கொண்டாள்
தாமக்குழலாளும் தழுவணையிற்பள்ளிக்கொண்டாள்

புலந்திரன் மதுரைக்கு வருகிறது.

பொன்னுமணியழகன் புலந்திரனார்தன்புரவி
ஆகாயமாயெழும்பி அந்தரத்தில்தான்பரந்து
தாமரைசூழ்நாடுகளும் தருமாபுரங்கடந்து
வாழ்மதுரைநாட்டில் வந்ததுஅப்புரவி
சிங்காரத்தோப்பிலே சென்றதுஅப்புரவி
சந்தனவாழ்மரத்தில் தனஞ்சயரைதானிறக்கி
கொண்டுவந்துவிட்டது கொற்றவனார்தன்புரவி
செம்பொன்கடிவாளஞ் சிக்கெனவேதான்பிடித்து
வைகைக்கரையிலே மன்னவனார்வந்திறங்கி
மஞ்சள்நீர்தோட்டத்தில் மன்னவனார்வந்திறங்கி
ஆடைகளைந்து ஆபரணந்தான்களைந்து
நன்றாய்ப்பணிதிகளை நாயகருந்தான்கழட்டி
பச்சைவடங்களைந்து பாண்டியப்பெருமானும்
கட்டழகியிதழுங் கண்டானே புடவையிலே
இனி காணவகையிலேயே கட்டழகிசீர்வடிவை
பார்க்கவகையிலேயே பாவையழகிடரை
சாந்திக்கழுத்தியரை சந்தனப்பூமேனியரை
குங்குமமொத்ததொரு கொம்பேரிடையாளை
அவள்-கட்டாணிவார்த்தைகளும் கைநீட்டிப்பேசுவதும்
பார்க்கவகையில்லேயே பாவையழகியரை
இன்னமொருகாலும் இனிகாணப்போறேனோ
எத்தனைநாள்செல்லுமோ இளங்கொடியைநான்காண
மர்தரையான்பிரிய வைத்தீர்மகாதேவா
தோகையரையான்பிரிய கொடுமைவைத்தீர்ஈஸ்பரரே

இவளைப்பிரிந்திருக்க என்னகுறைசெய்தேனோ
தேவியரைத்தானினைந்து சிந்தைமிகக்கலங்கி
ஆனந்தவாழ்மார்பன் ஆழச்சுனையிறங்கி
கொற்றவர்கள்கோமான் குளித்துக்கரையேறி
ஈரங்களைந்து இழைசேர்ந்தபட்டுடுத்தி
துவட்டங்கொண்டு துவட்டியந்தஇந்திரனும்
ஆனந்தப்பணிபூண்டு ஆனந்தவாழ்மார்பன்
நாணயப்பணிதிகளை நாயகருந்தான்பூட்டி
தென்மதுரைநாட்டான் திருநீற்றுக்காப்பணிந்து
சிந்தித்துநின்று சிவனையடிபணிந்து
சந்தனங்கொண்டணிந்து தங்கத்திருமேனியெல்லாம்
குங்குமங்கொண்டணிந்து கொற்றவனுந்தான்நிமிறி
மாணிக்கப்பச்சைவடம் மன்னவன்வரிந்துடுத்தி
மாதாவின்பாதத்தை வணங்கவேவேண்டுமென்று

புலந்திரன்தாயாரிடம்வந்து சேர்ந்தது.

சிங்காரத்தோட்டம்விட்டுத் தென்னரசுநாட்டானும்
சித்திரவீதிகளுந் தெருவும்பலகடந்து
மாதாகொலுவிருக்கு மண்டபத்தின்முன்னேவந்து
மாதாவின்கொலுவை வலமாகச்சுற்றிவந்து
முக்காலும்வலம்வந்து முடிவணங்கித்தெண்டனிட்டு
மாணிக்கப்பொற்பீடம் மன்னவனும்வீற்றிருந்தான்
அமர்ந்தார்கொலுவி லல்லித்திருமகளும்
அப்போ-சொல்பலருடைய சொக்கனார்கோவிலிலே
என்னுயிர்ச்சின்ன மெங்குமே தான்முழங்க
நாகசுரப்பதினெட்டு கவரிகளும்நின்றாத
ஊதினசின்னங்க ளுத்தமியாள்தொனிகேட்டு
வெடியரோபாச்சுதே வேந்தர்வரக்காணோமே
கர்ணறிந்தாரோ காவலர்கண்டாரோ
நாலாக்கடுந்திரளார் நம்மொருவர்கண்டாரோ
மாலைமுடியானை வதைசெய்தாராமாகில்
நான்மாளும்படியொழிய பண்ணியிருப்பதில்லை
பஞ்சவர்க்கென்னசொல்வேன் பாஞ்சாலிக்கென்னசொல்வேன்
அங்கவருக்கென்னசொல்வேன் அருச்சுனருக்கென்னசொல்வேன்
சிந்தையிலேயெண்ணி செங்கண்ணால்பூத்துதிர்த்தாள்

புலந்திரனைத் தாயார்கண்டது.

தட்சணமேகெவுளியடி சாற்றிற்றுத்தென்பொழிக்கு
பூவண்ணமைவிட்டிறங்கிப் பொன்மதுரைநாடாளும்
செம்பொன்கதவைத் திறந்தந்தபொற்கொடியும்
மைந்தன்கொலுவிருக்கு மண்டபத்திற்போய்புகுந்தாள்
மைந்தன்புலந்திரனை வளநாடிதான்பார்த்தாள்

அரைத்திருந்தசந்தனத்தை யள்ளியரைந்ததுபோல்
வற்றிக்கிடந்ததொரு வருள்பெரியகாவேரி
முட்டப்பெருகி கரைபுரண்டுவந்தாப்போல்
பூரித்திருதோளும் பொன்னுடம்பாணமின்னை
சந்தோஷங்கொண்டு தையல்வருகையிலே
மாதாவரவுகொண்டு மன்னர்புலந்திரனும்
சிங்காதனத்தையெடுத் திகழக்குதித்திறங்கி
இந்திரருமப்போது எதிரேநடந்துவந்து
பூவும்புதுமலரும் பொன்னருகுமட்சதையும்
மாதாவின்பாதம மலர்தூவிதெண்டனிட்டார்
வந்துபணிந்தவரை வாழ்த்திமெடுத்தணைத்து
வாழ்வீர்வளர்ந்திடுவீர் மண்ணையாள்காலமட்டும்
நிற்பீர்கிலைதரிப்பீர் நீரரசையாண்டிடுவீர்
கற்பதித்ததூணதுபோல் கலங்காதரசாள்வீர்
என்னைப்பெருவீ ரெதித்தார்முடிபெறுவீர்
பிள்ளைபெறுவீர் பெருமாள்பதம்பெறுவீர்
க்கிபுரமாள அரசுதனைப்பெறறிடுவீர்
ரநகராளுதற்கு மைந்தரைப்பெற்றிடுவீர்
ழயாள்மாது கலந்தாரிகோட்டையிலே
மைந்தரைப்பெறுவதற்கு மனங்குளிரவாழ்த்தினுள்
ஆசனம்போட்டார்கள் அங்கிருக்கும்தாதியர்கள்
இட்டதொருஆசனத்தி லிந்திரரும்வீற்றிருந்தார்
மைந்தர்புலந்திரரை வளநாடிதான்பார்த்து
உச்சியிலேதானிருந்து உள்ளங்கால்பரியந்தம்
பார்த்தாள்பலகாலும் பார்த்திபன்தன்மகனை
போனபுதுமைகளை புகழ்வீராகாலுமே
தேவிதன்னரண்மனைக்கு சென்றமொழியுமில்லை
குங்குமகத்தம்பம் குலைந்துமிருக்கவில்லை
போய்வந்தேனென்று பொய்யுரைத்தீர்மன்னவனே
எங்கேயிருந்துவந்தீர் இளவயதுகோமானே
எத்தூரஞ்சென்று எவ்விடத்தில்பள்ளிகொண்டீர்
என்னஅவள்கேட்க எடுத்துரைப்பாரிந்திரனார்
போய்வந்தேனென்னுச்சி பொய்கைதனில்நீராடி
ப்பட்டமலிரெடுத்து போற்றிபணியவந்தேன்
உள்ளத்தைத்தானுரைத்தான் உத்தமசிகாமணியும்
மலர்குழலாள்மாது மயிலண்ணயாளேதுரைப்பாள்
நீர்போனபுதுமைகளும் பொற்கொடியைக்கண்டதுவும்
ஆனந்தவாழ்மார்பன் அரசாளுந்தன்மைகளும்
வாசற்புதுமைகளும் வைத்திருக்கும்காவல்களும்
எதிரொருவரில்லாம லிராச்சியத்தையாள்கிறதும்
உத்தமர்கள்பாண்டவரை ஒட்டியரசாள்கிறதும்

கற்கோட்டைமுத்திரையுங் காவலாதுகாவல்களும்
ஆறுநிலையுந்தான்கடந்து இவ்விடம்வருவதுண்டோ
ஐயாயிரந்தோழி மார்களிருந்தீர்கள்
காரிழையாள் தாதிகளே கண்கெட்டுப்போனீரோ
இச்சிறையில்யான்காக்க வல்லொருள்சொல்வீரோ
வன்சிறையில்காக்கவைத்தால் மாதரேசொல்வீரோ
தாதியர்க்கெளிதாகத் தையலரும்வாழிருந்தேன்
வேண்டேனினிச்சென்மம் வெறுத்தேன்காண்மங்கையரே
மாண்டாலுஞ்சேதமில்லை வண்டார்குழலியரே
ஆரிளமுலையாள் அறைந்துகொண்டுதானழுதாள்
தாமக்கருங்குழலை தாதியருந்தோழியருஞ்
செங்கமலநாயகியாள் சேரவேயோடிவந்து
காசிவளகர்னர் கட்டழகர்தான்கேட்டால்
ஆக்கினைகள்வந்துவிடு மரிவையிளமயிலே
அரியாற்சொன்னேனு மாமேபொறுத்தருளவீர்
மாதின்திருவடிக்கே வந்துமிகத்தெண்டனிட்டாள்
தாதியவள்தணிக்கத் தணிந்திருந்தாள்தையலரும்
கொம்பேரிடையாளுங் கோபந்தணிந்தபின்பு
போனகதாதியரும் பொற்கொடியோடிவந்து
போசனங்களாக்கியென்று பொற்கொடியுந்தானழைத்தாள்
பூவணைவிட்டிறங்கிப் புட்ப மலரணையாள்
வாசமுமீந்து மலர்குழலாள்பூவுதரி
பாவையருமப்போது பற்கொம்புதானெடுத்து
பல்லைவிளக்கப் பவளவாய்கொப்பளித்து
ஸ்நானங்கள்செய்து சந்திசெபந்தான்முடித்து
மாணிக்கமண்டபத்தில் மங்கையருமங்கிருந்தாள்
தாதியர்களெல்லாந் தையலர்க்குமுன்னேவந்து
பொன்னின்துகிலொதுக்கிப் பின்புறமாய்வந்துநின்று
மாணிக்கச்சீப்பாலே வாரிமயிர்கொண்டையிட்டு
பரிமளபுட்பங்கள் பைங்கிளியாள்பூங்குழலில்
மருக்கொழுந்துமாலைகள் வைத்துமுடித்தார்கள்
புட்பமலராட்குப்பூமுடித்தானபின்பு
புலிமுகக்காலிவைத்துப் பொற்றளிகைதானும்வைத்து
பற்றமுள்ளகாய்கறிகள் வர்ணத்தளிகைவைத்தான்
பொரித்தபொரிக்கறியும் பொன்போல்சிறுபருப்பும்
பத்துவகைக்கறியும் பதினெட்டுபச்சடியும்
அன்பானபச்சடியும் அடைவாய்பரிமாறி
புத்துருக்குநெய்யும் புளிமையுடன்றானும்வார்த்து
பொன்போன்றசெம்பிலே வெந்நீருந்தான்வார்த்து
அந்தவடிசல் அமுதுண்டபிற்பாடு
முப்பழஞ்சர்க்கரையும் மிகவாசிவெள்ளிலையும்

அடைக்காயுந்தின்று ஆனந்தவாழ்பாரி
பூசித்துதானிருந்தாள் புருடனைத்தினந்தோறும்

கலந்தாரிக்குக் கெற்பமுண்டானது.

பொன்றாமணியழகர் புலந்திரனார்தேவியரும்
மூனவீரர்தேவியர்க்கு மூன்றுதிங்களாச்சுது
வண்டார்குழலார்க்கு பைந்தனுய்தோற்றிற்று
இட்டபிச்சைகயிலே எழுந்திருக்கத்தள்ளாது
உற்றுற்றுப்பார்த்து ஒருபோதுண்டிருக்காள்
தின்றுனிலையடிக்காய் தேனார்குழலாளும்
அம்மானையாடாளாம் அருங்குழல்பாராடாள்
பந்துபிடித்தழியாள் பள்ளாங்குழியாடாள்
காரிழையாள்மாதர்க்கு கருத்துகள்சேர்ந்தது காண்
குழிசர்முகள்போலே குலைவயிறுபெருத்தது
திருவயிறுமேனியுஞ் சீர்பெறவேதான்செழிக்க

கலந்தாரி கெற்பமடைந்ததைத் தாதியார்காண்கிறது.

தாய்போல்வளர்த்தெடுத்த தாதியவள்பார்த்து
மாதழகைநோக்கி மங்கையெடுத்துரைப்பாள்
வண்டார்குழலியே மங்கையராய்த்தோன்றுவதேன்
பாலைக்குழலாளே மைந்தன்வந்தவாறேது
கழுத்தடிசன்னோர்ந்து கன்னிமுகமாறுபட்டு
இளைப்புந்தளிப்புமாக ஏதுக்கு நீயேதோன்றுவதேன்
மன்னவர்திருமகனார் வந்தாரோயுன்னுடனே
அரசாளும்பூமுடியா னசலிவாவிட்டானோ
மெத்தவறிவுடையான் மெல்லியாவிட்டானோ
மாலையணியார்மன் மைத்துனனார்வந்தாரோ
பூங்குழலேயுன்னைத்தழுவி புல்கியவர்போனாரோ
வேறுபட்டமாதவசே மெல்லியரேயுரையுமென்றாள்

கலந்தாரிதாதிக்குத்தாறுகிறது.

அவ்வசனத்தைக்கேட்டு ஆரணிபூவையாள்
ஆறுதகோபமது ஆற்றமுடிபோகாமல்
இத்தனிடிப்புகளை என்னுடனேசொல்லவந்தீர்
முன்னொருவப்புளை பொய்குழலேசொன்னீர்கள்
இன்னமிடிப்புகளை என்னுடனேசொல்லுகிறீர்
காசிவளர்பூமுடியார் கர்னருக்கறிக்கையிட்டு
ஆக்கினைசெய்யாமல் அரணங்கேநானிருந்தேன்
ஒருவரறிந்தால் உலகமெல்லாந்தானறியும்
இருவரறிந்தால் எங்கெங்குந்தானறியும்
இந்நாள்வரையில் இருந்துவளர்ந்தோமே
கூடியிருந்தீரே கொம்பனைமாரெல்லோரும்
இதுநடுவில்வந்து எவரழித்தாரெந்தனையும்
கொல்லவினைசெய்கிறாய் கொம்பேரிடையாரே

இந்தச்சிறைதனைவத்ததினால் எல்லோருஞ்சொல்லீரோ
தாதியற் குமோவிதமாய்த் தைடலரோனினேன்
என்று நிகத்துதிக்கு ஏந்திழையாள்சொல்லுகையில்
தாதியர்களெல்லோரும் தைடலண்டையோடிவந்து
சுத்திநிற்றுப்பெண்களுக்குள் சூழ்ந்திருக்குஞ்சாதிகட்கும்
செங்கமலநாயகியாள் சேவலையோடிவந்து
காசினியோர்புகழும் கர்னர்வரும்வேளையிலே
ஆரளிழழலையாள் அழகைதால்கேட்டாள்
நாக்கோடுமுக்காப்பார் நல்லசெவிதானறுப்பார்
என்று-மாதுதிருவடிக்கு வந்திறங்கிதெண்டனிட்டு
தாமக்கருங்குழலாள் தாதியருங்கூறுவாள்
மாதேநீரொளித்தாலும் மைந்தனொளித்திடுமோ
சூதொளிக்கப்போகாது துன்னுஞ்சருங்குழலே
இன்னமொருதிங்கள் யேந்திழையேசென்றாலும்
தானேயறிகின்றார் தங்கக்குழலாளே
நீங்கள்-அறியாமற்சொன்னேனோ அரசமேபொருத்தருள்வீர்
என்று-மாதுதிருவடிக்கு வந்திறங்கிதெண்டனிட்டாள்
தாதியவள்தனிக்கத் தனித்திருந்தாள்தையலரும்

கர்னன்வேட்டைக்குப்போய்வருவது.

காசிலிவர்னர் கர்னரதிகாரன்
வேட்டைக்குப்போய் மீண்டுவருகையிலே
விடாய்த்துவொருமண்டபத்தை வீற்றிருந்தகர்னரவர்
சிந்துகவிகேட்டிருந்தார் சீர்கருணவீரியரும்
அந்தவழிதனிலே அல்லியம்மாள் தூதனவன்
ஓலைகொண்டுபோகிறான் உத்தமியாள் தூதுவனும்
ஆனந்தமாகவே ஆச்சாரச்சாவடியில்
மேளங்கள்தாளங்கள் விருதுபலமுழங்க
அவன்வரும்வழிதனிலே அதிகர்னர்வீற்றிருந்தார்
மண்டபத்திலருகாக மாதுமையாள் தூதனவன்

அல்லியுடையதூதன் கர்னரைக்காண்கிறது.

வந்தங்கேநின்று மன்னவனைத்தான்பார்த்து
ஆரோதெரியாது ஆதித்தன்சந்திரன்போல்
ஆரென்றுபார்ப்போமென்று அருகினில்வந்துநின்று
கர்னரென்றுதானறிந்து கையெடுத்துதெண்டனிட்டான்
அடிபணிந்துதூதுவனை யாரென்றுதான்கேட்க
ஆறயிரவரென்னும் அதிவீரபாண்டியர்கள்
அணிமதுரைநாட்டுக்கு அரசுமன்னர் தூதுவன்யான்
பொன்னுமணியழகன் புலந்திரற்குதூதுவன்யான்
அவற்குநீரையறல்லோ அதனுடை குற்றமுண்டோ
மன்னர் திருவடிக்கு மறுபடியுந்தெண்டனிட்டான்
மாணிக்கத்தூண்மன்றவில் மன்னவனும்போயொளித்தான்

கர்ணர் தூதனைக்கண்டு புலந்திரன்செய்திகேட்பது.

காசிநகர்வர்ணர் கர்ணருந்தான் வாழ்த்தி
தூதன்றனைப்பார்த்து சொல்லுவாரொருவசனம்
என்னைப்போல்மீறியே இந்திரனும்வளர்ந்தானே
நாடாளக்கற்றானே நாமக்குலவிளக்கு
செம்பொன்மணிமுடியான் செங்கோல்பிடித்தானே
இப்படிக்குமீறியே இந்திரனும்வளர்ந்திருக்க
வண்டார்குழலாளும் வளர்ந்திருந்தாளிருக்க
திங்களொருமுறைதான் தேன்மொழியாள்முழுகிறாள்
பேடைமயிற்கண்ணாள் பிள்ளைபெறுங்காலம்
காவலிலேவைத்தாயோ காக்கிறேன்கண்மணியை
மாலைமுடியாளும் வரவிட்டாலாகாதோ

கர்ணருக்குத் தூதன்சொல்லுவது

என்றுரைக்கக்கர்ணர் எடுத்துரைப்பான்தூதனவன்
மதுரையாதிகாதர் மன்னவனுமாளுகிறான்
மற்றுமுள்ளநாட்டைத்தும் மன்னவன்னரசாளுகிறான்
அரசாளுநாயகியாள் அல்லிப்பெருமாளும்
காவலர்கள்பாண்டவர்கள் காடேறுந்தநாள்முதலாய்
மாலைமுடிபாண்டவர்கள் வனவாசம்போனமுதல்
வண்டார்குழலாளும் பயிர்விரித்தநாள்முதலாய்
மாதமொருமுறைதான் வருவாள்கொலுமுகத்தில்
என்றுரைக்கதூதனவன் எடுத்துரைப்பார்கர்ணரவர்
நல்லதுதூதுவனே நானிருந்தமண்டபத்தில்
போசனமாகுதுகாண் பொருந்தியமுதுண்டு
நடவுங்காண்தூதாவென்று ராசமன்னர்சொல்லுகையில்
அவ்வசனங்கேட்டு அத்தூதனேதுசொல்வான்
உண்டுபசியாறிவந்தேன் உங்கள்கிருபையினால்
வெகுநேரஞ்சென்றாலே மெல்லியருங்கோபிப்பாள்
மாதினியுடகோபமது மன்னவரே நீரறிவீர்
போகவிடைதருமென்று புகழ்வீரன்தெண்டனிட்டான்.

கர்ணர்தூதனுக்கு வெகுமதிசெய்தனுப்பியது

வந்துபணிந்ததொரு மாதினது தூதனுக்கு
உத்தரீயப்பட்டுகளும் உடுக்கைக்குநல்ல ஆடைதந்தார்
போஜனங்கள்தேவையில்லை புகழ்வீரவெந்தனுக்கு
வெத்தயிலைச்சுருளும் வர்ணபழக்காயும்
காவலனும்வீரியனும் கைநிறையஅள்ளியிட்டான்
போகவிடைபெற்றுப் போய்விட்டான் தூதனவன்

கர்னன் கலந்தாரி கோட்டைக்குவருகிறது.

அப்போகருணர் ஆலோசனைபுரிந்து
காரிழையாள்மாதுநல்லாள் கலந்தாரிநாயகிக்கு
அவர்மைத்துனனார்மீறி வளர்ந்தவருமைகளும்

அறிவையற்குசொல்லி அறிக்கையிடவேண்டுமென்று
தன்மனதுக்குள்ளே நார்வேந்தர் தானினைந்து
மேளவகைகளும் விருதுகள்கையயர்த்தி
விருதுபலமுழங்க வீதிப்புறப்பட்டார்
மாதினதுகோட்டைக்கு மன்னவநும்போய்புகுந்தார்
வாசற்பதினெட்டும் வைத்திருக்குமுத்திரையும்
சேரவேதானறிந்து செம்பொன்மணிமுடியான்
உத்தமனும்வீரியனும் உட்கட்டிற்போய்புகுந்தான்
காலுக்குநீர்வார்த்தார் காரிழைமார் தாதியர்கள்
பாவையழகியரும் பட்டாலடித்துவட்டி.
மாணிக்க ஆசனங்கள் மன்னருக்குத்தான்போட்டார்
இட்டதொருஆசனத்தில் இன்பமுடன்வீற்றிருந்தார்
வந்தஇளைப்பாற மன்னர்திருமுசமும்
கவறிபணிமாறினர் கட்டழகிதாதியர்கள்

கர்னன் கலநதாரியைத்தாதிகளைவிட்டழைப்பது

தமக்குகவறியிட்ட தாதிமுகம்நோக்கி
அரசாளும்நாயகியாள் அல்லித்திருமகனர்
போர்கஞ்சாவீரன் புலந்திரனர்தேவியரை
காரிழையாள்மாது கலநதாரிநாயகத்தை
ஆர்முலையாளை அழைத்தோடிவாருமென்றான்
தன்கையில்கவரியை தாதொருத்திகைகொடுத்து
மங்கையாள்பள்ளிகொண்ட மண்டபத்திற்போய்புகுந்தாள்
திருவேவுருவழகே செல்வப்பெருந்தேவி.
அத்திநகருடைய அலங்காரப்பூஷணமே
அன்னமேயும்முடைய அம்மானும்வந்தார்கள்
மங்கையரேயும்முடைய மாமனும்வந்தார்கள்
காசிநகராளும் கர்ணரிங்கேவந்தார்காண்
மாலைமுடிமார்பன் மண்டபத்தில்வந்துசென்று
உம்மையழைத்துவர உத்திரவுசொன்னார்காண்

சலந்தாரி கர்னரைக்காண்கிறது.

அவ்வசனங்கேட்டு அலங்காரப்பூஷணியாள்
தாமக்கருங்குழலாள் தாதிகளைத்தோளூன்றி
காரிழையாள்மாது கைலாகுதான்கொடுக்க
மெத்தனவேதானடந்து வேல்புருவக்கண்ணாளும்
மாமனவர்வந்திருக்கும் மண்டபஞ்சென்றேறினர்
மாமனர்பாதமது வணங்கியேதெண்டனிட்டாள்
வந்துபணிந்தவொரு மருமகளைத்தான்பார்த்து
வாழ்வாய்வளருவாய் மாயனடிபெறுவாய்
மகாலட்சுமிபோல் மங்கிலியமுண்டாக
மதுரையெல்லாமாள்வதற்கு மைந்தனைப்பெற்றிடுவாய்
வாழ்த்திவிடைகொடுக்க மாதுகருங்குழலாள்

கர்ணர்கலந்தாரியைக்கேட்டது.

காசினிவர்ணர் கர்ணரவர்தான்பார்த்து
மாதுமையாள் தாஜெனிக்க மன்னவருமே துரைப்பார்
நாணமழிந்தாயோ நாமக்குலவிளக்கே
வெட்கமறிந்தாயோ வேல்மருவங்கண்ணாளே
நாணமும்வெட்கமும் நாயகமேகற்றாயோ
நீயேயறிந்தாயோ நேரிழையேபுத்திகளை
காரிழையேயுந்தனுக்கு கற்பித்தார்யாரோதான்
உன்மைத்துனனார்மீறிவளர்ந்து இருக்கிறார்
நாடாளக்கற்றானும் நாமக்குலவிளக்கு
செம்பொன்மணிமுடியான் செங்கோல்பிடித்தானும்
என்னைப்போல்மீறி இந்திரனுமவளர்ந்தானோ
வாராதிருந்தானே வளமிலொருபயணம்
வண்டார்குழலாளை வாழாப்பெண்ணாக்கிவைத்தான்
ஆனந்தமார்பனை ஆள்விட்டுவரவழைத்து
விசையன்திருமகனை விலங்குகள்போடவைப்பேன்
என்றுமிவருரைக்க ஏந்திழையாள்தான்பேசாள்
எட்டிப்பார்த்தாராமிந்திரனார்தேவிமாரை
காலைத்தொடக்கியே கரியகுழலளவால்
பார்த்தார்பலகாலும் பார்த்தன்மருமகளை
திருமுடியழகன் ருதியமைத்தானழைத்து
இவள்-கப்பொழுதுங்கண்ணூர் மலர்சொரியுஞ்செவ்வாயாள்
சந்திரஉதயம்போல் தருபபுகிறதிருமுகங்கள்
சேரியிருப்பதென்ன செண்பகப்பூமேனியெல்லாம்
அலர்தாமரைப்போல் ஆரணங்குதிருமுகங்கட்கு
மலர்ந்ததிருமுகங்கள் வாடியிருப்பதென்ன
தாமக்குழல்மாதே தாதிகளேசொல்லுமென்றார்
ஆடைகுறைவாச்சோ ஐயர்மருமகட்கு
ஆமுழலையாட்கு ஆபரணக்குறைச்சலுண்டோ.
ஏதுணுமேவாடினாள் எங்கள்குலவிளக்கு
மதுரைக்குப்போக மங்கையருந்நினைத்தாளோ
மைத்துனரைக்காணும் மாதுநினைத்ததுண்டோ
வண்டணியுங்குழலாள் வாடியிருப்பதென்ன
இதுவென்கருமம் எனக்கறியக்கூறுமென்றார்
தாமக்கருங்குழலாள் தாதியவளேதுசொல்வாள்
வேறொன்றுமில்லையையா வேந்தன்பெருமாளே
தாரார்குழலுடையாள் தலைநோகுதென்றுசொல்லி
உண்ணுதிருந்தாள்காண் ஒன்றிரண்டுநாளாச்சே
கர்ணரதுகேட்டு காரிழையேதாதிகளா
எந்தனுக்குச்சொல்லாமல் இந்தகருமமென்ன
உங்களை-சிறையிலேவைத்து சிரபதமாற்றிவைப்பேன்

தலைச்சிறைத்தூரான் தாள்விலங்குபோட்டுவைப்பேன்
என்றுஎழிட்டுப்பார்த்தாராம் இந்திரனார்தேவியரை
காலைதொடங்கியே கரியகுழலாளவாய்
பார்த்தார்பலகாலும் பார்த்தன்மருமகளை
தாய்போல்வளர்த்தெடுத்த தாதியரைத்தானழைத்து
வண்டார்குழலாட்கு மைந்தராய்த்தோற்றுதுகாண்
பேடைமலர்க்கண்ணாட்குப்புத்திரராய்த்தோற்றுதுகாண்
மன்னர்திருமகனும் வந்தானோ இவ்விடத்தில்
வாள்விசையன்புத்திரனும் வந்தானோவுறவாக
கற்கோட்டைமுத்திரையுங் காவலர்கள்விழித்திருக்க
ஆகாயமார்க்கத்தில் அந்தரமாயவந்தானோ
மாதுமணவாளன் வந்தானோசொல்லுமென்று
கர்ணரவர்கேட்கையிலே காரிழைமார்கூறுவார்
நாலார்கடுந்திரளார் நாற்றுவர்க்குப்பிள்ளையில்லை
மகாராசராசருக்கு மைந்தன்முதலில்லையே
ஆரைநீர்கண்டீர் அடையாளம்நீர்பார்த்தீர்

## கர்ணன் தாதிகளைக்கேட்டபது

நீர்கண்டகுறிப்பை கருத்துடனேசொல்லுமென்றான்
காசிலிவர்னன் கர்ணரவரேதுசொல்வார்
வண்டார்குழலாட்கு மைந்தனேதப்பாது
மாதுமணவாளன் வந்தகுறிகாணோமே
மதுரைதுரைமகனும் வந்ததுஇல்லையென்று
எந்திழையேநீங்கள் என்மேலேஆணைவிட்டு
தாமக்கருங்குழல்மார் தாதியருமப்பிசகளும்
சேரவேஓடிவந்து சேயிழையாரெல்லோரும்
காசிலிவர்னன் கர்ணரேயும்மாணை
உம்மேலேயாணைபடி ஒருகுறியும்நாமறியோம்

## கர்ணர் தாதிகள்மேற் கோபித்தது.

காசிலிவர்னன் கர்ணருக்கண்சிவந்து
அவளுக்குஒற்றைப்பணிதியிட்டு வுத்தரியப்பட்டுடுத்தி
ஆபரணமிட்டு அழகாகப்பட்டுடுத்தி
வைத்தேனேயுங்களை மங்கையற்குகாவலாய்
சொல்லுதற்குவைத்தேனோ தோகையிளங்கொடியே
ஆடைகளையுமென்றார் ஆபரணம்வாங்குமென்றார்
திரளான்ஆபரணஞ் சேரக்கழட்டுமென்றார்
பாவாடையோடே பைங்கிளிமார்நீங்கிருங்கள்
மாணிக்கப்பேழையிலே வைத்தாயுங்களை நான்
ஆக்கினைகளில்லையே அலைதாரன்பட்டணத்தில்
வாசல்போரத்தனையும் வகையறவேவெட்டிடுவேன்
சிந்துநாடாளுகிற் தேத்தாசன்மன்னவனை

தோரணக்கழுவுதனில் சுங்காரனைப்போட்டிடுவேன்
உத்தமியாருககளை உசுதூண்டிபோட்டிடுவேன்
என்றுமிககோபித்து எரிபறந்துகண்சிவந்து
வாளையுருவிக்கொண்டு மன்னவருப்புறப்பட்டார்
வாசற்படிகடந்து மன்னன்பெருமானும்
மற்றுபொருகிளைவாய் மன்னவனுந்தானினைந்து
அவள்-ஆச்சியாளைக்கேட்டு அறிந்துமேநாம்வருவோம்
என்றுவாளையுறையிலிட்டு மன்னரதிகருணர்
தருமமுடியழகன் தலைவாசல்தான்கடந்து

கருணர்கலந்தாரியின் தாயாரைக்கேட்கவருகிறது.

கருணன்வருகையிலே காளையந்தபுத்திரனும்
அவன்சேனைபரிகளுடன் திரளுபணியுடனே
வந்துமணித்தெரு மனையும்பாராமல்
கோபமுடனேயந்த கொற்றவனுந்தானடந்தார்
மாதினதுகோட்டையை மன்னவனுங்கிட்டிவந்தான்
துன்னுங்கருங்குழலாள் துற்சடையாளப்போது
பெளவனையும் விருதுடனேபெல்லியரும்
கேளிக்கைப்பார்த்திருந்தாள் கிளிமொழியாள்தங்களுடன்
மாதினதுகோட்டையை மன்னவனுங்கிட்டிவந்தார்
தண்டிகையைவிட்டிறங்கி தருமமுடியானும்
உத்தமனார்வீரியமும் உட்கட்டிற்போய்புகுந்தார்
தாமக்கருங்குழலாள் தாதியெதிர்கண்டு
இவர்-வந்ததொருகாரியம் மாதேதெரியாது
ஆலாத்திகாட்டாமல் அறிவையரோயிருந்தோம்
காலுக்குநீர்வார்த்து கட்டழகிதாதியர்கள்
பாவையழகியர்கள் பட்டாலடிதுவட்டி
கவரிபறிமாறினார் காரிகையாரப்போது
தனக்குக்கவரியிட்ட தாதிமுகம்நோக்கி
துன்னுங்கருங்குழலாள் துற்சடையாளெங்கேயென்றார்
அவ்வார்த்தைதான்கேட்டு அரிவையர்களோடிவந்து
துன்னுங்கருங்குழலாள் துற்சடையண்டைவந்து
தெண்டனிட்டார்தாதியர்கள் தேனேர்குழலாட்கு
துன்னுங்கருங்குழலாள் துச்சடையாள்தான்பார்த்து
எங்குவந்தாய்தாதி எனக்கரியகூறுமென்றாள்
கர்ணர்வந்தாரென்று காரிகைமார்சொல்லுகையில்

கர்ணரைக்காண துற்சடைவருகிறது.

கர்ணர்வந்தாரென்றவுடன் கடுகியெழுந்திருந்து
பட்டுபளபளென்ன பாடகக்கால்சோதிமின்ன
முத்துமினுமினென்ன மோதிரக்கால்சோதிமின்ன

மாதுநடையசைந்து வந்தாளேமயில்போல
கர்ணரதுபாதத்தில் கட்டழகிதண்டனிட்டாள்
வந்துபணிந்தவளை வாழ்த்தியந்தமன்னவனும்
ஆசனம்போட்டார்கள் அங்கிருக்குந்தாதியர்கள்
இட்டதொருஆசனத்தில் இருந்தாளிளங்கொடியும்
அங்கவளநாட்டார் அதிகநணர்திருமுகத்தை
அண்ணு-வாடியிருப்பதென்ன மன்னவர்திருமுகங்கள்
சீறியிருப்பானேன் செண்பகப்பூமேனியெல்லாம்
அலர்ந்தசெந்தாமரைப்போல் அண்ணுவேவுந்திருமுகங்கள்
கருகியிருப்பதென்ன கர்ணர்பெருமாளே
மாநுகங்கொண்ட மன்னன்திரியோதிரன்
ஆடரவங்கொண்ட அரசன்திரியோதிரன்
இடும்பனவனுன்னை யேடாகூடஞ்சொன்னானோ
என்னக்கருமமிது எனக்கறியச்சொல்லுமென்றாள்
என்றுபவள்கேட்க எடுத்துரைப்பார்மன்னவரும்

கர்ணர் துற்சளைக்குச்சொல்வது.

எனக்கு-பத்தினியாள்சாபம் பலிப்பதற்குமுன்னுகை
அரசாளும்நாயகியாள் அல்லித்திருமகனுர்
போரஞ்சாமன்னன் புலந்திரவீரியனும்
இந்திராணுர்தேவி என்னகதிபோனானோ
தாமக்குகுழலாளொன் தலைக்குவினைசெய்தாளோ
வேல்பொருதுங்கண்ணாளும் வெட்டியெறிந்திடுவாள்
என்றுரைக்கருணர் எதுரைப்பாள் துற்சளையும்
மாதுநல்லாளிப்பொழுது வன்கொடுமைசெய்தாக்கால்
வேல்பொருதுயல்லியம்மாள் வெட்டவினைசெய்வாளே
நீர்-அத்திபுரத்தை அரசாண்டிருக்காமல்
நீர்-மாளுகிறகாரியமேன் மன்னன்பெருமாளே
என்னகருமம் எனக்கறியச்சொல்லுமெனறாள்
காசிவளநாடார் கர்ணரவரேதுசொல்வார்
காரிழைபள்மாது கலந்தாரிநாயகிக்கு
பொல்லாமசக்கைகள் பொருந்திற்றுபொற்கொடிக்கு
ஆகாதமசக்கை ஆரிழைக்குண்டாச்சு
வண்டார்குழலாட்கு மைந்தனைத்தோன்றுகுது
மதுரைப்பெருமாளும் வந்ததுகாணுமே
என்னகருமமோ என்றுரேகருணரவர்
துன்னுங்கருங்குழலாள் துற்சளையாள்கூறுவாள்
மாதுமணவாளன் வந்தால்வரவேணும்
உமதுமைந்தன்புலந்திரனுர் மன்னவன்தான்வரவேணும்
மற்றுமொருமன்னவர்கள் வருவாரோகாவலிலே
வாசற்றடைதாண்டி வருவாரொருவருண்டோ
தாதியர்மகளுக்கு தையலர்கள்சொல்லையோ

தாதியரைக்கேட்கிலையோ தார்வேந்தாவென்றுரைத்தாள்
தங்கையவள்சொல்லுகையில் தனஞ்செயனார்கூறலுற்றார்
தாதியரையெல்லாம் தனித்தனியேகேட்டுவிட்டேன்
தாங்களெல்லாமறியோமென்று தன்மேலேயாணையிட்டார்
துன்னுங்கருங்குழலாள் தற்சடையுந்தான்கேட்டு
மாதுதிடுக்கிட்டு வயிறுபொருமிக்கைபிசைந்து
இழந்தோமேநாமுமிளங்கொடியையின்றேடே
ஆர்சொல்லுக்கேளாமே அரவக்கொடிவேந்தன்
என்றுஆவிகுழைந்தையால் அறைந்துகொண்டுதானழுதாள்

### தற்சடையாள் கலந்தாரியைக்காணவருதல்.

ஆரணங்குமவள்சேதி அறிந்துநான்வருவேனென்று
வேல்பொருவங்கண்ணாளும் வேந்தனைக்கையமர்த்தி
மன்னவனைக்கையமர்த்தி மாதுவெளியில்வைத்தாள்
தண்டிகைகொண்டுவந்தார் தாமக்குழலாட்கு
தாமக்குழலாளும் தண்டிகைமேலேறினாள்
வண்டார்குழலாளை மறைத்தார்கள்குடையதனால்
சுற்றிபிரப்படிக்க தோழியர்சூழ்ந்துவர
மாதினதுகோட்டையண்டை மங்கையரும்வந்துவிட்டார்
வாசற்பதினெட்டும் வைத்திருக்குமுத்திரையும்
சேரவேதான்திறந்து தேனார்குழலாளும்
தண்டிகைவிட்டிறங்கித் தையலந்தற்சடையாள்
ஐயமலர்க்கண்ணாளும் உட்கட்டிற்போய்புகுந்தாள்
தாமக்குழலியாகள் தாதிகளெதிர்கண்டு
காலுக்குநீர்வார்த்தார் காரிகையார்தாதியர்கள்
பாவையழகியரும் பட்டாலடிது ட்டி
வந்துவிளைப்பாற வான்கவரிவீசினார்கள்
மாணிக்கஆசனத்தில் மங்கையரும்வீற்றிருந்தாள்
தாதிமுகம்நோக்கி தையலருமேதுசொல்வாள்
காரிகையாள்மாது கலந்தாரிநாயகத்தை
ஆரமுலையாளை அழைத்துவாயிங்கேயென்றாள்
தன்கையில்கவுரியைத் தானொருத்திகைகொடுத்து
வீசங்கவரிதனை வேறொருத்திகைகொடுத்து
மங்கையரும்பள்ளிக்கொண்ட மண்டபமேபோய்புகுந்து
அழகேதிருவுருவே அலங்காரப்பூஷணமே
அன்னமேசொர்ணமே அமிர்தாடமானே
சாந்துகழுத்தியரே சந்தனப்பூமேனியரே
ஆரணங்கேயுப்புமுடைய ஆச்சியழைக்கிறாள்காண்
ஆச்சியென்றுசொல்லுகையில் அதிகமனமகிழ்ந்து
பூவணையைவிட்டிறங்கிப் பொற்கொடியாள்நாயகியும்
மாதாவின்பாதமது வணங்கியேதெண்டனிட்டு
வண்டார்குழலாள் மலரணையில்பூவெடுத்தாள்

உங்களோர்தன்முதலாய் எங்கள்சாமார்தன்முதலாய்
நாங்கள் அத்தனைபேரும் அழியத்திருவுளமே
மாளத்திருவுளமே வண்டார்குழலாளே
மைத்துனனார்வந்த வாறெனக்குச்சொல்லுமென்றாள்
இவ்வார்த்தையனைமாள் மறுவார்த்தைதான்பேசாள்
தன்பூஞ்சிலம்பைப்பார்த்து புனக்கிளியுந்தானிருப்பாள்
தன்னாங்குழலாள் தற்சடையுங்கூறுவாள்
மகாராஜராஜாக்கள் மன்னர்கள்தம்பாணை
அரசாளும்ராணியாள் அல்லிதிருவாணை
வனவாசங்காணும் மன்னர்திருவாணை
மாதுகுழலவிரித்த மயிலனையாள்திருவாணை
உன்மைத்துனர்மேலாணைகண்மயர் மாதரசேசொல்லுமென்றாள்
என்றனைமாதரசே எனக்குனகதுச்சொல்லுமென்றாள்
மைத்துனர்மேலாணையிட மாதருங்கோபித்து
வண்டார்குழலாளும் மலரணையைவிட்டிறங்கி
பள்ளிகொள்ளுமண்டபத்தை பைங்கிளியும்விட்டுபுகுந்தாள்
தாழ்வணையின்மேல்கொடுத்து தையலரும்சார்ந்திருந்தாள்
தன்னைக்கருங்குழலாள் தற்சடையுந்தான்பார்த்து
மாதுதிடுக்கிட்டு வயிற்றைப்பிசைந்துகொண்டாள்
இழுத்தோமோநாமும் இளங்கொடியாளிந்நேரம்
ஆரமுலையாளும் அழகியகண்முத்துதிர்த்தாள்
தாமக்குழல்மங்கையர்கள் தாதியர்கள்வந்துநின்று
மாதிருந்த மண்டபத்தை மங்கையர்கள்போய்புகுந்து
இத்தனைஆயாசமுடன் இருந்தீர்தாயடிபோலே
மைத்துனர்மேலாணையிட வந்துவிட்டார்கோபித்து
உன்மைத்துனனாரிங்கே வந்தபடிதப்பாது
ஆணழகரிந்திரனார் வந்ததாய்த்தோன்றுது
காசினிவர்னர் கர்ணர்பெருமாளும்
மாறுவேடனென்றுசொல்லிவாளுருவிசபிடித்து
ஆயுதம்காட்டி அவரிருக்கப்பூங்கொடியே
அங்குதிசைநாட்டான் அவர்மாண்டாராமானால்
மகாராஜராஜாக்கள் மன்னவர்கள்நூற்றுவரும்
சேரவேமாளுவார் செம்பொன்பணிமுடியார்
உங்கள்ஐவர்முதலாக ஆச்சியருந்தான்கூட
ஆரணங்கோங்கள் ஆயிரம்பேர்தாதியரும்
இத்தனைபேர்மாள இழக்கத்திருவுளமோ
மாளத்திருவுள்மோ வண்டார்குழலாளே
மைத்துனனார்வந்த வகைபிரித்துச்சொல்லுமென்றாள்
அதற்குபவளசேனை அல்லிபருமகளும்
பார்த்தார்கள்தாதியரும் பைங்கிளிமாரெல்லோரும்
உன்மைத்துனர்மேலாணை மாதரசேசொல்லுமென்றாள்

தாய்போல்வளர்த்தெடுத்த தாதியவள்சொல்லுகையில்
ஆரணங்கேநீநும் ஆணைவிடுஞ்சொல்லுகிறேன்
நீர்சொன்னபிறக்கல்லவோ தோகையாணைவிடுவதுகாண்

கலந்தாரி தாதிகட்குச்சொன்னது.

காரிழையாள்மாது கலந்தாரியேதுரைப்பாள்
முழுகியநாலாம்நாள் முந்தழகேசொல்லோரும்
உடனைப்பள்ளிக்கொள்ளும் உண்டானபெண்களெல்லாம்
பாதியிரவுசென்று பதினையுநாழிகையில்
வீசுதுகாண்மேனியெல்லாம் வெகுநெருப்பாயெங்களுக்கு
மண்டபத்தின்கூடத்தில் மாதாவேபள்ளிகொண்டோம்
அன்றையராத்திரியில் அர்ச்சுனர்புத்திரரும்
ஆகாயவான்புரவி அவரேயலாதாரன்
ஆருமறியாமல் அங்கொருவர்காணூரல்
சந்தனமும்குங்குமமுஞ் சவ்வாதுபரிமளமும்
வன்கவகையாய்பூஷணங்கள் வகையுடனேதான்கொடுத்து
அன்றையராத்திரியில் அவர்வந்துபோனார்காண்
அடையாளந்தான்கொடுத்து அவர்போனார்தென்மதுரை
எங்கேயடையாளம் என்றுரைத்தாதியவள்
மாணிக்கப்பேழையிலேமாதரேகட்டிவைத்தேன்
எத்தனை ஆக்கினைக்கு இருந்தீர்காண்தாய்மடிமேல்
மைத்துனர்மேலாணையிட மாதரேசேகோபித்தீர்
மகராஜராஜாக்கள் மன்னர்மேலாணைவிட்டேன்
வனவாசங்காடுறைந்த மாமன்மேலாணைவிட்டேன்
மாமியார்பாஞ்சாலி மயிலேணைமேலாணைவிட்டேன்
அரசாளுந்நாயகியாள் அல்லிமேலாணைவிட்டேன்
உமதுமைத்துனரையாணை முக்காலும்நானும்விட்டேன்
ஏலங்குழலாளே இருமென்றெழுந்திருந்தாள்
துன்னுங்கருங்குழலால் துர்சடையாள்காணிருக்க
மாதிருக்குமண்டபத்தை மயிலிணையாலோடிவந்து
ஆருமறியாமல் அருச்சுனர்புத்திரரும்
அடையாளந்தான்கொடுத்து ஆணழகர்போனாராம்
மாணிக்கப்பேழை மாதராது முன்னேவைத்தாள்
அல்லிக்கபிறும் அழுந்தியசிராவும்
சீருவுங்கச்சை திருமுடியுந்தானெடுத்து
அல்லியடையாளமென்று அரிவையவள்சொல்லுமே
ஆணிப்பொன்னைலே அழகிட்ட அடையாளம்
சபதமுடித்தாரோ தருமமுடியாரும்
இப்படிக்குமீறி இந்திரனூர்வளர்ந்தாரோ
நாமக்குலவிளக்கு நாயகர்வீரியற்குள்
செம்பொன்முடியாருஞ் செங்கோல்பிடித்தாரோ

ஊராளக்கற்றதோ டக்தாசிகோமளமே
செம்பொன்மணிமுடியான் செங்கோலுண்டாமோ
தென்னன்முடிவேந்தன் செங்கோல்பிடிக்காதோ
மன்னர்திருமலு மண்டலத்தையாள்கிறதோ
முத்திரைமோதிரத்தை முடிமன்னர்தாமெடுத்து
கட்டழகன்மோதிரத்தைக் கைதனிலேதானணிந்தான்
சரியாயிருந்ததுவே தருமமுடியார்க்கு
பவுத்திரமோதிரத்தை கண்மணியொற்றிக்கொண்டார்
கட்டழகன்மோதிரத்தை கண்மணியொற்றிக்கொண்டார்
மாதுமணவாளன் வந்தபடிதப்பாது
மகாராஜாராஜாவை வைத்திருந்துபாரோமோ
மைந்தன்புலந்திரன்றன் வடிவழகைப்பாரோமோ
மாதுமணவாளனுக்கு மருவிட்டுப்பாரோமோ
காணாதிருந்தேன் கன்னாற்றுறேனே
பாராதிருந்தேனே பாவிகாணேனே
முத்திரைமோதிரத்தை முடிமன்னர்கையிலிட்டு
மற்றுமடையாளம் மருமகனேகாட்டுமென்றார்
காட்டினாளடையாளம் கர்னர்மனமகிழ
அடிசில்வருங்வேளை ஆக்கதுசாணல்லுவே
உண்டுபசியாறி வுத்தமனேநடவுமென்றார்

கர்னர் புறப்பட்டுவருகிறது.

அந்ததேசாதிபதி அதிகர்னனோதுசொல்வார்
மகாராஜாராஜாக்கள் மன்னவர்கள்நூற்றுவரும்
சும்மாவிருப்பார்கள் துன்னுங்கநங்குழலே
அங்கேஅடிசில் அமுதுண்பென்றங்கையமே
வலம்குழலியமே இருவென்றெழுந்திருந்தார்
வேந்தரதிகர்னர் வெளியேபுறப்பட்டார்
வேட்டைபரிகலமும் வேந்தனதுசேனைகளும்
காட்டில்வாழ்மானுகளும் கானமயிலுகளும்
யானைமுயலுகளும் அன்பானவுடும்புகளும்
சிட்டுக்குருவிகளும் சிருகுருவிபூங்குருவி
மன்னர்கொண்டிருக்கும் வல்லூறுகுருவிகளும்
சேரவந்துகூடிற்று சேனைகளத்தனையும்
வேட்டைப்புரவிமேல் வேந்தனுந்தானேறி
ஒக்கப்புரவிவிட்டார் உண்டானதோழரெல்லாம்
சேனைமனுவுகளுந் திரளும்பரிகலமும்
மகாசேனைதன்னுடனே மாலைநெடுமுடியார்

அம்பலத்தில் இரகசியம்.

கூடிவருகையிலே கும்பல்சூழ்ந்துபேசுகிறார்
காரிழையாள்மாதுசுலந்தாரிசெய்திகளை
தங்களுக்குள்ளேதான் தனித்தனியேபேசலுற்றார்

இரகசியங்கள்மிஞ்சுகுது ராசாக்களம்பலத்தில்
அந்தரகசியம் அம்பலத்தில்பெருகினதே
எழுதரியவம்பலத்தில் ஏகாந்தமிஞ்சினதே
தேசத்தழகனவன் திரியோதிரன்கேட்டு
தனக்குக்கவரிபிடிக்குந் தாதிமுகம்நோக்கி
ஏதடிபூந்தாதி யேகாந்தரகசியங்கள்
இரகசியங்கள்பெருகுது நல்லானதாதியரே
பாண்டவர்களைவரும் படைகூட்டிவாராரோ
ஆணழகர்பாண்டவரின் ஐவர்வெளிப்பட்டாரோ
கட்டழகர்பாண்டவரின் காலாள்வருகிறதோ
தருமர்தம்பியர்கள் தனஞ்செயர்கள்வாராரோ
அம்பலத்துரகசியங்கள் அறிந்துவாதாதியென்றார்
வீரங்கவரிகள் வேலிருந்திகைகொடுத்து
படிக்கப்படிகடந்து பாவையிளந்தாதி
மாணிக்கவம்பலத்தில் வந்தாளேதாதியவள்
உற்றிருந்துகேட்கிறாள் ஒருவருஞ்சொல்லார்கள்
கோளுரையாதலைத்துக் குருக்களடிபணிந்தாள்
ஆர்பணிதாதிநீ அறியவுரையுமென்றார்
ஆர்பணியுமல்லான் ஐயாவேயுன்பணிநான்
தேசத்தழகனவன் திரியோதிரன்பணிநான்
என்னையனுப்பினது எனக்கறியச்சொல்லுமென்றார்
அம்பலமெல்லாம் அடையாரகசியங்கள்
எழுதரிய்அம்பலத்தில் ஏகாந்தமிஞ்சுகுது
பாண்டவர்களைவரும் படைகூடிவாராரோ
ஆணழகர்பஞ்சவர்கள் ஐவர்வெளிப்பட்டாரோ
காவலர்கள்பாண்டவரிற் காலாள்வருகிறதோ
அம்பலத்துரகசியங்கள் அறிந்துவரச்சொன்னார்கள்
என்னைக்குருபரையா எனக்கறியச்சொல்லுமென்றாள்
அவ்வார்த்தைதான்கேட்டு அன்பாய்குருக்களுந்தான்
பயப்படுவாருமுண்டோ பார்வேந்தரன்னமுண்டு
அரசன்சோருண்டிருந்து அஞ்சிநடுங்குவதேன்
சொல்லுமையாவென்று தோகையிவள்கேட்கையிலே
வேறொன்றுமில்லைகாண் வேல்பருவங்கண்ணாலே
அரசாளுநாயகியாள் அல்லித்திருமகளார்
பொன்னுமணியழகர் புலந்திரர்தேவியர்க்கு
கோரிழையாள்நல்லாள் கலிந்தாரிநாயகிக்கு
வண்டார்குழலார்க்கு மைந்தராய்தோன்றுதுகாண்
மதுரைத்துரைமன்னன் வந்ததுவுங்காணுமே
அதனாலேகாணுகுது அடர்ந்தரகசியங்கள்

தங்களிலேகூடித் தனித்தனியேபேசுகிறார்
அவ்வார்த்தைதான்கேட்டு அடிபணிந்துதாதியர்கள்
மீளதிரும்பிவந்தாள் வேல்புருவங்கண்ணாளும்
தேசத்தழகுமன்னன் துரியனடிபணிந்து
ஆசனத்தின்கீழே யடிபணிந்துதெண்டனிட்டாள்
என்னகருமமடி எனக்கரியச்சொல்லுமென்றான்
சொல்லப்பயப்படுவேன் சுந்தரப்பூமுடியேன்
அரசாளும்நாயகியாள் அல்லித்திருமகளார்
அருச்சுனனாரீன்றெடுத்த அழகுபுலந்திரனும்
போர்க்குஞ்சாமன்னன் புலந்திரனார்தேவியற்கு
ஆகாமசக்கை• அருமசக்கையாரிலழக்கு
இட்டப்படுக்கையிலே எழுந்திருக்கத்தள்ளாது
உண்ணாள்குளியாளாம் ஒருநேரமுண்பாளாம்
பந்துபிடித்தறியாள் பள்ளாங்குழியாடாள்
சிந்துகவிகேளாமல் தேனார்குழலாளும்
வேல்புருவங்கண்ணாள் விளையாடசம்மதியாள்
வண்டார்குழலாளும் மைந்தராய்த்தோன்றதுகாண்
பேடைமலர்கண்ணாட்கு பிள்ளையாய்த்தோன்றதுகாண்
மதுரைவளநாட்டான் வந்ததுவங்காணுமே
அதனாலேகாணுதையா யம்பலரகசியங்கள்
தங்களிலேகூடி தனிதனியேபேசுகிறார்

துரியோதிரன் தாதிகளுக்குச்சொல்வது.

என்றுரைக்கத்தாதி இருசெவியில்தான்போட்டு
தேசத்தழகுமன்னன் துரியோதனப்பெருமாள்
கண்டரோமாதிகள் கர்ணர்செய்தகாரியத்தை
ஆற்றிலேதான்மிதந்து அலைந்தொழுகிப்போகாமல்
தேர்ப்பாகனென்று சிலபேர்கள்சொல்லாமல்
பிள்ளைக்குபிள்ளையாய் பெரியபிள்ளையாகவேதான்
பொன்னினால்மகுடபது பிரபலமாய்த்தான்கொடுத்து
மாட்டிவளர்த்துநான் மகுடமுடிதரித்து
உத்தமனைநானுமிப்போ வுள்ளவாய்வைத்தேனே
சேத்திற்புதை ாதே சிறுமணலில்பாயாதே
உத்தமனுமெந்தனுக்கு வுபகாரஞ்செய்தானே
தேர்ப்பாகனென்றுமிங்கே தெரியவேவேண்டுமோ
சமயமுதவிகளைச் சாமார்த்தியமந்திரிகளை
அங்கவரையெல்லாம் அனுப்பிவிடைகொடுத்து
சேரவிடைகொடுத்துச் செம்பொன்முடியானுஞ்
சிங்காதனத்தைவிட்டுத்தாழக்குதித்திறங்கி
அருந்தடிகாணாதே அரண்மனைபோய்புகுந்தார்

தாமக்கருங்குழலாள் தாதியர்கள்மூப்பிமாரும்
காலுக்குநீர்கொண்டு காரிகைமார்வந்தார்கள்
சிங்காதனமிட்டார் தேனார்குழலார்கள்
இட்டஆசனத்தில் இருந்தானே தேர்வேந்தன்
பேடைமலர்க்கண்ணாள் பெருந்திருவாளங்கேயென்றார்
நீலக்கருங்குழலாள் நீலமுத்துமண்டபத்தில்
கிளிமொழியாள்தங்களுடன் கேளிக்கைபார்க்கிறாள்
மாதயிருக்குமந்த மண்டபத்திற்போய்புகுந்து
நாலாலகடுந்திரளார் நாற்றிருவர்தேவியற்கு
மைத்துனனார்வார வரவுகண்டுமங்கையர்கள்

பெருந்திருவாள் துரியோதனனைக்கண்டது.

சிங்காதனந்தனையிட்டுத் திகழக்குதித்திறங்கி
மாதர்களெல்லோரும் மறைவாகப்போவார்கள்
பேடைமலர்க்கண்ணாள் பெருந்திருவாள்தான்பார்த்து
எதிரேநடந்துவந்து ஏலக்குழலாளும்
மானைக்கொண்டீரோ மதிபற்றுப்போனீரோ
ஆடரவங்கொண்டீரோ அறிவழிந்துபோனீரோ
தம்பிமார்தேவியென்று சற்றுமதியாமல்
வாருமென்றுசொல்லி மலரிக்கைதனைத்தான்பிடித்து
பள்ளியறையில் பைங்கிளியுங்கொண்டுசென்று
பேடைமலர்க்கண்ணாள் பெருந்திருவுங்கூறுவாள்
தருமமுடியாரோ தனித்துவாக்காரியமேன்
என்னகருமமிது எனக்கரியச்சொல்லுமென்றான்
அடிகண்டாய்மோமாதே நீ கர்ணர்செய்தகாரியத்தை
அவர்ஆற்றிலேமிதந்து அலைந்துநழுகாமல்
தேர்ப்பாகனென்று சிலபேர்நகையாமல்
பிள்ளைக்குபிள்ளையாய் பெரியபிள்ளையாகவே
மாற்றிவளர்த்தேனே மகுடமுடி தரித்து
உத்தமனென்றே உலகமெல்லாம்பெருமிட்டு
என்றுமிவனுரைக்க யெந்திழையுங்கூறுவாள்
பேடைமலர்க்கண்ணாள் பெருந்திருவுங்கூறுவாள்
இந்நாளுருதியா யிருந்தரசாண்டோமே
சுந்தரப்பூமுடியார் துரோகமென்றுஞ்செய்ததில்லை
என்னவினைசெய்தார் எனக்கரியச்சொல்லுமென்றாள்
அந்தமொழிகேட்டு அரசன்விளம்பலுற்றான்
சுந்தரப்பூமுடியாள் சொல்லுவான்வார்த்தையொன்று
நேளாமயிலே கிரீட்டிபயின்றெடுத்த
போர்க்கஞ்சாமன்னன் புலந்திரவீரியனார்
ஆனந்தவாழ்மார்பன் அவருடையதேவியரே
காரிகையாள்மாது கலந்தாரிநாயகத்தை

என்னுடையகோட்டையில் இளங்கொடியைவையாமல்
அவன் ஆச்சியான்மனையில் ஆனைக்கலவாமல்
தன்னுடையகோவிலிலே தையலாளைவையாமல்
வேறேயொருகோட்டைக்கு வேறாகவிடுகட்டி
மாதினைதுகோட்டைக்கு மறுபடியும்போனதில்லை
நாலக்கடுந்திரளார் நாற்புவரும்போனதில்லை
கற்கோட்டைமுத்திரையாக் காவலனுந்தன்னுடென்று
வாசலுக்குக்காவல் வாள்வீரர்சூழ்ந்திருக்க
இரவும்பகலுமா இளங்கொடியாள்தன்னுடனே
மருவியுறவாடியே மைந்தன்பெறமாசக்கது
பின்னைபெற்பமானால் பெருந்திருவாள்நாயகியும்
என்றுமிகவாசன் பேர்த்திலழக்குச்செல்லுகையில்

பெருந்திருவாள் சொல்லுகிறது.

பேடைமயிர்க்கன்னால் பெருந்திருவுக்குறவாள்
சிவசிவாவென்று திருச்செவியில்கையைவைத்தாள்
ஆகாவென்றுசொல்லி ஆனைக்குமுத்துதிர்த்தாள்
நம்முடையகீர்னனை நாம்சொல்லக்காரணமேன்
இந்தாளுநதியுடன் இருந்துவரக்கண்டோமோ
சந்தாப்பூமுடியான் துரோகமொன்றுஞ்செய்ததில்லை
அவனைதாயார்முலைகொடுத்துத் தங்கைதயால்சீராட்டி
மாரிணைமேலே வளர்க்கவைத்தார்தாயாரை
எரிட்டுப்பார்ப்பாரோ என்னுளும்ராசமன்னன்
நாடகசாலையிலும் நாயகமாராசிவந்தால்
தன்னைத்தமக்கையென்போர் தையர்களியாவரையும்
தன்பாதமேகண்ணாகப்பார்த்திருப்பான்புகழ்வீரன்
கீர்னனைச்சொல்லுகிற காரியமோசவிக்கவையும்
அங்கவளநாட்டார் அவர்முன்னேசொன்னக்கால்
ஆயுதத்தால்தன்னுயிரை அழித்துக்கொள்வாராணழகர்
மேலிருந்தனுமாய் விசாரித்துவருகிறோம்
என்னைனையென்று இளங்கொடியாள்மாலையிட்டாள்

கீர்னர் வருகிறது.

காசிலிவானர் கர்னரவர்வாராராம்
ஆதித்தன்புத்திரனர் அங்கவளநாட்டழகன்
கெங்கையிலேவந்த கீர்த்திபிரதாபன்
வைசைப்பெருங்கிவா வந்தவன்காண்கர்னரவர்
வெள்ளித்தடிக்காரர் வீரியமாய்ச்சூழ்ந்துவர
தன்னுர்படைவீர் தடிப்புடனேசூழ்ந்துவர
கண்டாயோமாதே கீர்னர்செய்தகாரியத்தை

நாகசுரமேளம் நற்சவரின்றாத
தோணக்கொம்பூதுவார்கள் கொற்றவனார்வீரியற்கு
ஊதினார்சின்னம் வலமேசெழுந்தானதிர
விருதாக்குமாலை மெல்லியருங்கேட்டிருந்தாள்
வந்தருளுகின்றார் பாளைகனப்பலத்தில்
எதிட்டுப்பார்த்தாற்காண் இராசானம்பலத்தில்
நான்வந்துகொலுக்கலைப்பேன் நாடோறுமம்பலத்தில்
இன்றுகொலுகலைந்த தேதோகருமமிது
பாளைகனம்பலத்தில் வந்தருளுகின்றார்
வேட்டைபரிசனமும் வேந்தனதுசேனைகளும்
சேர்வந்துகூடிற்று சேனைகளத்தனையும்
அங்கவளநாடாளும் அதிகருணர்வீரியனும்
பங்கிட்டுக்கொண்டார்கள் படைமன்னர்சேனையெல்லாம்
சமயமுதலிகளைச் சாபார்த்தியபந்திரியை
அங்கவரையெல்லாம் அனுப்பிவிடைகொடுத்து
பாடும்புலவருக்கும் பட்டருக்குஞ்சித்தருக்கும்
தேனக்கேலாதானவன் தியாகங்கள்தான்கொடுத்து
அங்கவரையெல்லா மனுப்பிவிடைகொடுத்து
சிங்காதனத்தைவிட்டுத் திசமுகுதித்திறங்கி
ஆலாத்திக்கொண்டுவந்தார் ஆயிரந்தாதியர்கள்
முத்தாலேயாலாத்தி முன்னேசுத்திவிட்டார்
பவளத்தாலாலாத்தி பத்துநூறுபிரம்பேர்
புரிவிட்டுத்தானிறங்கி பொற்கருணர்தான்பந்தார்
ஒக்கத்துரைகளுடன் ஒன்டானதோழருமாய்
கைகட்டித்தானடந்தார் காவலர்களெல்லோரும்
தருமமுடியான தங்கட்டிற்போய்புகுந்தான்
தாமக்குழலார்கள் தாதிமாரெதிரில்கண்டு
காலுக்குநீர்வார்த்தார் காவலனார்வீரியற்கு
பாவையழகியரும் பட்டாலடிதுவட்டி
ஆசனிப்போட்டார்கள் அங்கிருக்குந்தாதியர்கள்
இட்டதோராசனத்தில் ஏறுபல்பன்னவனார்
போடைமலர்க்கண்ணாள் பெருந்திருவாளெங்கேயென்றார்
ஏகாந்தம்பேசுகின்றார் இருவருப்பள்ளியறை
தான்வாறேனென்று நாயகமேசொல்லுமென்றார்
பெருந்திருவாளண்டையிலே பொற்கொடியுமோடிவந்து
ஆசனத்தின்கீழே யடிவணங்கித்தெண்டனிட்டாள்
வந்துபணிந்தவளை வாழ்கதியந்தமன்னவனும்
கருணர்வந்தாரென்று கட்டழகிசொல்லுகையில்
வரச்சொல்லுமென்றுரைத்தாள் மாதுபெருந்திருவாள்
தாதியவளோடிவந்து தையல்வரச்சொன்னாள்காண்
அவ்வசனங்கேட்டு ஆணழகர்வுள்நுழைந்தார்

கர்னர் பெருந்திருவாளைக்கண்டது.

பேடைமலர்க்கண்ணாள் பெருந்திருவாள் தன்னடிக்கே
ஆசனத்தின்கீழே அடிவணங்கித்தெண்டனிட்டார்
வந்துபணிந்தவரை வாழ்த்தினாள்மன்னவரை
வாழ்வீர்வளருவீர் மண்ணூழிகாலமட்டும்
கிற்பீர்கிலைதரிப்பீர் நீரரசையாண்டிடுவீர்
நீரேயரசாள்வீர் நீடூழிகாலமெல்லாம்
இருவர்நடுவாக இருத்தியந்தராசாவை
எறிட்டுப்பார்த்தார்கள் இவருடையதிருமேனி
வாடியிருப்பானேன் மன்னருடதிருமுகங்கள்
விடாய்ப்பட்டிருக்குது வேந்தன்திருமேனி
கட்டிதயிருகளும் காவடியிலன்னமும்
பாணக்கம்நீர்மோரும் வரவிட்டேன்பார்வேந்தா
விடாய்த்துநீமண்டபத்தில் வேந்தனேவரவில்லையோ
எந்தவருவந்தீர் என்றாள்பெருந்திருவாள்
ஆச்சிநானந்த அவ்வழியில்வந்ததில்லை
மற்றுமொருவழியை வந்தேனேநாச்சியாரே
மாலைமுடியானேநீ வருவதற்குமுன்பாக
ஆரப்பசிக்குதென்று அரவக்கொடியாரும்
ஆனந்தவாழ்மார்பா அடிசலுக்குதான்வந்தார்
மாலைமுடியாரே நீர்வந்தசெய்திகண்டு
தாமிஷமாய்நின்றார்கள் தனஞ்செயர்களிருவருமாய்
மஞ்சனீராடியே மன்னரிருவருமாய்
ஆனந்தமாய்நீங்கள் அடிசலுக்குவாருமென்றாள்
சிங்காதனத்தைவிட்டு திகழக்குநித்திரங்கி
சுந்தரப்பூமுடியர் தோழனையுங்கைகோர்த்து
மஞ்சநீர்சாலையிலே மன்னவரும்போய்புகுந்தார்

துரியோதனனுங் கர்னருங்கூடினது.

ஆனபணிகழட்டி ஆனந்தவாழ்மார்பன்
நனையாப்பணிதிகழைநாயகியார் தான்கழட்டி
மாலைமுடியாரும்மஞ்சள்நீர் தானாடி
ஈரத்துபில்களைந்து இழைசேந்தப்பட்டுடுத்தி
தூவட்டங்கொண்டுதுவட்டியந்தசுந்தரர்கள்
ஆனபணிபூட்டி ஆனந்தவாழ்மார்பா
தேனல்லோதாரர் திருநூற்றுக்காப்பணிந்து
செந்தூரப்பொட்டுமிட்டு சிவனையடிபணிந்து
பூசைபண்ணுமண்டபத்திற் போனாரிருவருமாய்
நித்தியபடிதானங்கள் நிறையவேதான்கொடுத்து
செம்பொன்முடியாருஞ் செபதபந்தான்முடித்து
சுந்தரப்பூமுடியான் தோழனையுங்கைகோர்த்து

அமுதுண்ணமண்டபத்தை அலரிட்டுநீர்தெளிந்து
எங்குமலங்கரித்து எத்திசையும்நீர்தெளித்து
பூமியோடொத்ததொரு பொற்றடுக்குதான்போட்டார்
பொற்றடுக்குமேலே புகள்வீரர்வீற்றிருந்தார்
சிங்கமுக்காலில்வைத்து செம்பொன்றளிகைவைத்தாள்
பொறித்தபொறிக்கறியும் பொன்போல்சிறுபருப்பும்
கூட்டிப்படைத்தாள் கொம்பேரிடையாளும்
அந்தஅடிசில் அமுதுண்டபிற்பாடு
அத்தளிகையுண்டபின்பு மறுதளிகையுண்டார்கள்
கையலம்பிக்கொண்டு கனகமணிமண்டபத்தில்
தாமக்கருங்குயிலாள் தாதியருமூப்பியரும்
வாய்த்தயிலைச்சுருளும் வர்னப்பழக்காயும்
வாங்கியமுதுசெய்து மன்னரிருவருமாய்
அந்தக்கொலுச்சாமம் ஆச்சுதுகாணந்தநேரம்
ஆபரணந்தான்பூண்டு அழகியபட்டுடுத்தி
சுந்தரப்பூமுடியார் தோழனையுங்கைகோர்த்து
ஆனந்தவாழ்மார்பர் அம்பலத்தில்தான்போனார்
சேரக்கொலுவில் சிங்காதனமிருந்து
வந்தெதிரேகண்டார்கள் மாலைமுடியாரை
காசிலிவர்னர் கர்னர்பெருமாளும்
இருமிருமென்று இணைகடக்கக்கையமர்த்தி
சிங்காதனத்தில் சேரவிருந்தார்கள்
ஏறியிருந்தார்கள் ஏழுமணிசிங்காதனத்தில்

துரியோதிரன்கர்னரைக்கேட்கிறது.

தேசத்தழகுமன்னன் திரியோதிரப்பெருமாள்
கர்னரைத்தான்பார்த்து கவடனெடுத்துரைப்பான்
மாநகக்கொடிவேந்தன் மன்னன்முகம்பார்த்து
நீர்பெருகியஆற்றிலே போற்றியேபோகாமல்
சேற்றிலழுந்தாதே சிறுமணலில்பாயாதே
தேற்பாகனென்று தெரிந்துமிகச்சொல்லாதே
பிள்ளைக்குப்பிள்ளையாய் பெரியபிள்ளையாகவுன்னை
மாற்றிவளர்த்தேனே மகுடமுடிசூட்டியுன்னை
மன்னென்றுபேயருமிட்டு மண்ணுளவைத்தேனே
உத்தமனுய்ச்செய்து ஊராளவைத்தேனே
உபகாரமெத்தசெய்தாய் உற்றதொருதேற்பாகா
என்றுமிவனுரைக்க எடுத்துமிகவுரைத்தார்
காசிலிவர்னர் கர்னரவரேதுசொல்வார்
என்னைப்பேழையில்வைத்தும் பேருற்றில்விட்டதுவும்
தேர்பாகன்றன்கையிலே சிக்கையுநதபட்டதுவும்
என்னை-மாற்றிவளர்த்தி மண்ணுளவைத்ததுவும்
அரியசதோவிங்காட்டு அம்பலத்துசேனையெல்லாம்

இதுபேச்சுசொல்லவோ இந்தச்சபைநடுவே
சொல்லவேவேணுமோ சுந்தரப்பூமுடியார்
இந்நாளுறுதியா யிருந்தோமரசாண்டோம்
சுந்தரப்பூமுடியார் துரோகமென்றும்செய்ததில்லை
இந்நாளுமில்லாதிப்போ தென்னவினைசெய்தேன்யான்
சுந்தரரேசொல்லாமல் சொன்னால்தெரிவதுண்டோ
தீயினிற்சுட்டபுண்ணு சீக்கிரத்திலாறிவிடும்
நாவினாற்சுட்டபுண்ணு நாயகனேயாராது
இப்போ-என்னவினைசெய்தேன் எனக்கரியச்சொல்லும்
தேசத்தழகுமன்னன் துரியோதனன்கேட்டு
அரசாளும்நாயகியாள் அல்லித்திருமகனார்
போற்கஞ்சாமன்னன் புத்திரதேவியரை
காரிழையாள்மாது கலந்தாரிநாயகத்தை
அவள்-ஆச்சிஅரண்மனையில் ஆரணங்கேவையாமல்
என்னுடையகோட்டையிலே இளங்கொடியைவையாமல்
வேறே-யொருகோட்டைகட்டி வீணாகவீடுகட்டி
அன்றிழித்துக்கட்டி ஆரணங்குதான்கொடியை
மன்னரதுகோட்டைக்கு மறுபடியும்போனதில்லை
நூலால்கடுந்திரளார் நாற்றுவரும்போனதில்லை
கற்கோட்டைமுத்திரையுங் காவலனேயும்மூடிதென்று
வாசலுக்குகாவலா யுன்மைந்தனைக்காவல்வைத்து
இரவும்பகலுமா யிளங்கொடியாள்தன்னுடனே
மருவியுறவாடி மைந்தனுண்டாக்கிவைத்தார்
என்றுமன்னன்தானுரைக்க இதைக்கேட்டுகர்னரவர்
அரகரவென்றுசொல்லி அரசனுங்கண்சிவந்து
சிவசிவாவென்று திருச்செவியிற்கையைவைத்து
காசிலிவர்னர் கர்னருங்கண்சிவந்து
சீரியகண்சிவந்து செங்கோல்முகத்ததும்பி
உறுக்கியசெம்பனது வுதிரம்போற்கண்சிவந்து
உன்சோற்றையுண்டதுவும் வுன்னரசையாண்டதுவும்
பிஞ்சுமணிமுடியார் புனலடையவேண்டுமென்று
வேண்டேனினிசென்மம் வேறுநினைப்பதில்லை
மாண்டுமடிந்திடுவேன் வைகுந்தஞ்சேர்ந்திடுவேன்
செத்துமடிந்திடுவேன் சிவன்பாதஞ்சேர்ந்திடுவேன்
மாளுகிறேனென்றுசொல்லி வாளுருவிகைபிடித்தான்
கொற்றவர்கள்கோமான் குலையிலேவாலைவைக்க
அம்பலத்துசேனை அடையக்கொளுகலந்து
சேனைகளத்தனையுஞ் சேரவந்துபணிந்தார்கள்
ஆனந்தவாழ்மார்பன் அறும்வாளால்வீசினார்

துரியோதனன் கர்னனுக்கு சமாதானஞ் சொல்லுவது.

தேசத்தழகன் திரியோதிரன்பார்த்து
கண்டோரமேயின்று கர்னருடையகோபத்தை
இந்நாளுங்கண்டதில்லை இவருடையகோபத்தை
ஆருக்குபண்டுவிடமாட்டான் அங்கவளநாட்டான்
என்று சிங்காதனத்தைவிட்டு நிகழுக்குதித்திறங்கி
பின்னேவந்து பெருமானைச்சேர்த்தணைத்தான்
இணையிர் இல்லைசேதாழா என்னுயிர்காவலனே
காலங்களிரேழும் கண்டுணரவைத்தவனே
என்தனிமைபூநீக்கும் தர்மப்பெருமானே
என்னைக்கரைவலைவத்த கர்னர்பெருமானே
தனியாய்த்தனையுதார்வேர்தாவுன்கோபப்
படைதக்கவாய்துடிக்க கண்ணைத்துடைத்துக்கொண்டார்
கண்டார்கணையாழி கட்டழகன்கைதனில்தான்

கர்னர்புலந்திரன்கணையாழி காட்டினது

இந்நாட்டிலேவேலையல்ல இந்தக்கணையாழி
மதுரையில்வேல்சுவாமர் மன்னாதகோமானே
ஆருடையாழியிது அடையாளஞ்சொல்லுமென்றார்
ஆழியெடுத்து அலதாரன்வாங்கிதான்
அரசாளும்நாயகியாள் அல்லிநிருபசனார்
உன்மைந்தர்புலந்திரனார் வந்ததுநானறியேன்
அறியாமல்சொன்னேன் அரசெபெருந்தருள்வீர்
என்றுவாய்தயவிலேசாருநும் வர்னப்பழகாயும்
காவலர்வீரியற்றுக் கைநிறையஅள்ளியிட்டார்
என்னைசேருநம் இல்லையிர்தந்நின் றமென்றான்
மன்னுடிவாசங்கள் மன்னர்கையில்தான்கொடுத்தான்
வாசங்கள்சாப்பிட்டு மன்னன்தனித்திருந்தான்
தேசத்தழகுமன்னன் திரியோதனன்கூறுவான்
பருவபதமானை பஞ்சவர்களைவரையும்
நாடுநகரமும் நல்லதொருராச்சியமும்
அடங்கலும்தோற்று அனைவரும்போனாரே
முத்திரைகையிட்டபோதீர் முடிமன்னர்கோவிலெல்லாம்
அன்றுயெடுத்துவந்த ஆழியிதுகாணும்
அடையாளமல்லவென்று அலதாரன்கூறினான்
இப்பெரியவடையாள மெடுத்துவந்துகாட்டுமென்று
எங்கேயடையாளம் எடுத்துவந்துகாட்டுமென்றான்
உத்தமனார்கர்னர் ஊழியரைத்தான்பார்த்து
தன்னுங்கருங்குழலாள் துற்சடையாளரண்மனையில்
மதுரையடையாளம் மாணிக்கப்பேழையிலே

இருக்கிறதென்றுசொல்லி எடுத்தோடிவாருமென்றாள்
உத்தமர்கள்வீரியரும் ஊழியப்பேர்தான்கேட்டு
துன்னுங்கருகுழலாள் துற்சையாள்தானிருக்கும்
மாதிருக்குபண்டபத்தை வந்துமிகதெண்டனிட்டான்
துன்னங்கருங்குழலாள் துற்சடையாள்தான்பார்த்து
நீர்யார்பணியுமன்று அறியவுரையுமென்றாள்
யார்பணியுமல்ல அடியேனுமுன்பணிதான்
காசிலிவர்னர் கர்னர்பணிதானுமென்றான்
ஆரணங்கேயுமுடைய அண்ணர்பணிதானுமென்றான்
மதுரைபுலந்திரரும் வந்ததமில்லையென்று
மாதுமணவாளர் வந்தபடியில்லையென்று
காசிலிவர்னர் கர்னர்மேல்சந்தேகமாய்
கூறினார்கண்டீரோ கொடிநாகங்கொண்டவரும்
மதுரையடையாளம் மாணிக்கப்பேழையிலே
இருக்குதென்றுசொல்லி எடுத்துவரச்சொன்னார்காண்
எங்கேயடையாளம் எடுத்துவந்துதாருமென்றார்
துன்னுங்கருங்குழலாள் துற்சடையுந்தான்கேட்டு
அவர் ஆர்சொல்லுங்கேளார் அரவக்கொடிவேந்தன்
இழந்தோமோநாமும் இளங்கொடியையின்றோடே
ஆரமுலையாளும் அழகியகள்முத்துதிர்த்தாள்
மாணிக்கப்பேழையிலே மாதருங்கைகொடுத்தார்
வாங்கிதான்கையைபத்தி மாலேமுடியானும்
கொண்டுவந்துமுன்னேவைத்தார் கொற்றவனார்தூதுவன்
காசிலிவர்னர் கர்னர்திருவடிக்கு
கொண்டுவந்துவைத்து கொற்றவனுந்தெண்டனிட்டு
மாணிக்கப்பேழையை மன்னவனுந்தான்திறந்து
ஆணிப்பொன்னாலே அழுத்தியகுப்பியிட்டு
ஆயிரம்பொன்பெற்ற அபரஞ்சிவர்னசரம்
மன்னவனுங்கைகொடுத்தான் மாணிக்கமோதிரத்தை
பார்வேந்தன்கைகொடுக்க பதினைகங்கொண்டோனும்
ஐவரிடதேவியவள் அரிவைவனம்போனாளே
முத்தரிபோடப்போகீர் முடிமன்னவிட்டனைத்தும்
அன்றுமெடுத்துவந்த அடையாளபேழையடி
அடையாளமல்லவென்று அரசனுமேதுசொல்வான்
அந்தப்படிச்சொன்னாலும் அரிவையரைவைப்பதில்லை
தேனார்குழலியரை தீவளர்த்திதள்ளிவிடும்
அங்கதேசாதிபதி அதிகருணர்கூறுகிறார்
ஆரமுலையாளும் ஆளனுப்பிபோகவிட்டு
வண்டார்குழலாள் மருவோலைவந்தபின்பு
தேனார்குழலாளைத் தீவளத்திடுதள்ளிடுவோம்
தேசத்தழகுமன்னன் திரியோதனன்கேட்டு

எந்தப்படிசொன்னாலும் இளங்கொடியைவைப்பதில்லை

துரியன்கோபித்துஅக்கினியைவளர்த்தச்சொன்னது.

செம்பொன்மணியோளைத் தீக்குழிவெட்டுமென்றார்
அக்கினியில்தள்ளிவிட்டு அரிவையிளபாதராசை
அத்திநகர்பட்டணத்தை ஆளாமல்விடுவதில்லை
வீண்வார்த்தைபேசாதே வேணமட்டுஞ்சொன்னாலும்
இளங்கொடியைவைப்பதில்லை என்னதான்சொன்னாலும்
தேனார்குழலாளைத் தீவளர்த்திதள்ளிடுவேன்
உத்தபர்சல்வீரனைப் ஊழியரைத்தானழைத்து
நித்திலங்குமுடியான் நியமித்தபேர்களோரும்
அத்தனைபேரையும் அழைத்தோடிவாருமென்றான்
அத்தனைபேர்களும் அப்பலத்தில்வந்தார்கள்
எங்களையழைத்தது யேதுவகைசொல்லுமென்றார்
அல்லிமருமகளை அக்கினியிற்றள்ளுதற்கு
அதனாலழைத்தேனென்று அரசனுக்குத்தெண்டனிட
அத்தனைபேருமாய் அப்பலத்தில்வந்துநின்று
எங்கேயையா தீக்குழிகள் எவ்விடத்தில்வெட்டுவது
அல்லிமருமகளை அக்கினியில்தானேற்ற
தேனார்குழலாளைத் தீமேலிக்கநாள்பார்க்க
என்—ஆசாரவாசல்முன்னே அடாவேவெட்டுமென்றான்
வெட்டிக்குழிவரித்தார் வேந்தரந்தநாழிகையில்
தீக்குழிகளாச்சுதென்று தெண்டனிட்டாரூழியர்கள்
தீயைவளர்த்துமென்றான் திரியோதனப்பெருமான்
நித்திலங்குமுடியார் நிமித்தங்கர்ணர்தான்கேட்டு
காவலாம்வீரியர்கள் காட்டகத்திலவந்துநின்று
பட்டதிறம்பார்த்து பரிவுடனேயெல்லோரும்
ஆச்சாவுந்தேக்குமே அழகாய்விறகடுக்கி
சந்தனதேக்குஞ் சதுராய்விறகடுக்கி
மூட்டினார்தீயை முடிமன்னர்சொற்படிக்கு
வானமட்டுந்தீயும் வளர்க்கவேயந்நேரம்
ஆகாயமட்டும் அக்கினிகள்தான்வளர்த்தி
தீக்குழிவளர்த்ததென்று தெண்டனிட்டார்சேவகரும்
தேசத்தழகுமன்னன் திரியோதனன்கேட்டு
காசிவிவர்ணர் கர்ணர்முகம்நோக்கி
அல்லிமருமகளை அக்கினியிற்றள்ளுதற்கு
அந்தப்பொழுதிலே அக்கினியிற்றள்ளுதற்கு
ஆரமுலையாளை அடித்தோடிவாருமென்றான்

அக்கினியில் கர்ணர்விழப்போனது.

ாசிவிவர்ணர் கர்ணரதுகேட்டு
ன்மேல்சந்தேகம் எழில்வீராகண்டாயோ

அக்கினியில்நானுமிப்போ ஐயாவேகுதிக்கிறேன்
என்று-வாரிந்துகட்டிப்பச்சைவடம் மன்னரதிகர்னர்
தீக்குழியைச்சுற்றிவந்தான் தென்னன்பெருமானும்
அம்பலத்துசேனையெல்லாம் அடாக்கொலுகலைந்து
கட்டிபிடித்தார்கள் கர்னர்பெருமாளை
கொற்றவனும்வீரியனும் கோபம்தணிந்தபின்பு
காசிலிவர்னர் கர்னர்திருமகனூர்
சிந்துநாடாளுகின்ற செல்வப்பெருமாளை
அல்லிமருகனை அக்கினியிற்றள்ளுதற்கு
அந்திப்பொழுதிலே அக்கினியிற்றளளுதற்கு
ஆரணங்கையிப்போ அழைத்துவரச்சொல்லுமென்றார்

தூதர்கள் கர்னர்புத்திரனுக்குச்சொல்வது.

உத்தமர்கள்வீரியனும் ஊழியப்பேர்தான்கேட்டு
சிந்துநாடாளுகின்ற செல்வப்பெருமானே
அவர் ஆசனத்தின்கீழே யடிவணங்கிதெண்டனிட்டார்
நீர்யார்பணிதூதா அரியவுறையுமென்றார்
தேசத்தழகனவன் திரியோதனன்பணிதான்
வேறொன்றுமில்லையையா வேந்தர்பெருமானே
உங்கள்ஐயர்சந்தேகமாய் அரவக்கொடிவேந்தன்
கூறினார்கண்டீரோ கொற்றப்பூமன்னவனே
அல்லிமருமகனை அக்கினியிற்றள்ளுதற்கு
வானத்தளாவுந்தீயும் வளர்ந்ததுமன்னவனே
காரிழையாள்மாது கலந்தாரிநாயகத்தை
அக்கினியிற்றள்ள அழைத்துவரச்சொன்னார்காண்

கர்னர் புத்திரன்சொல்வது.

ஊழியர் தானுரைக்க வுத்தமனுந்தான்கேட்டு
அல்லிமருமகனை அக்கினியிற்றள்ளிவிட்டு
ஆள்வானோபின்னிருந்து அத்திநகர்பட்டணத்தை
அறியாரோதானும் அல்லியுடசேவகத்தை
மதுரைதுரைச்சியரை மணமாலைசூட்டவென்று
கர்சொன்றுநேராத காளையந்தஅருச்சுனனூர்
முந்தியேவந்து முடிமன்னர்மாலையிட்டார்
மதுராபுரியாளை மணமாலைதான்சூட்டி
தேவேந்திரலோகம் சென்றாரேஅருச்சுனனூர்
அப்படியல்லவோ ஐவருடசேவகங்கள்
ஏழாம்வயதிலே எதிர்த்துவந்தநீன்முகனை
எட்டிமயிர்பிடித்து எடுத்துவுடல்பிளந்து
சோமானுதிரங்குடித்துகரையோடி
மன்னன்குடல்பிடுங்கி வனமாலைபூண்டுகொண்டாள்
இவன்அக்கினியில்தள்ளி அரசாளப்போகிறானே

அன்று-பத்தினியைக்கொண்டுவந்து பாரச்சபைநடுவே
மாதினது துகிலாடை மாறுகன் தானுரிந்தான்
தக்கப்புகழுடைய தருமர்பொறுத்திருந்தார்
அன்றுபொறுத்ததுபோல் ஐவரின்றுபொறுப்பாரோ
நாலாலகடுந்திரளார் நூற்றொருவர்சேனையெல்லாம்
சேரக்கருவறுப்பார் சேனைகளத்தனையும்
அத்திபுரப்பட்டணத்தை அடங்கலுந்தானிடித்து
பருத்தியும்ஆமணக்கும் பஞ்சவர்களிரைதந்திடுவார்
பொறும்பொறுமென்று பொற்கருணர்புத்திரரும்

கர்னன்புத்திரன் கலந்தாரியைக் கண்டது.

ஆரணங்குசேதி அறிந்துநான்வந்தேனென்று
உத்தமன்வீரியனும் உட்கட்டைபோய்புகுந்தான்
தாமக்கருங்குழலாள் தாதியெதிர்கண்டு
ஆதினப்போட்டார்கள் அங்கிருக்குந்தாதியர்கள்
வந்துபிளப்பாரி மன்னன்திருமுகத்தை
தாதியவள்பார்த்திருந்து தாவேந்தனைதுசொல்வான்
மாலைக்குழல்மாரேலங்கள் மனிதரைநீரழையும்
ஆரணங்குப்போது அழைத்தோடிவாருமென்றார்
தனைகைசவுரி தாமெருந்திகைகொடுத்து
மங்கையருப்பள்ளிக்கொண்ட மண்டபம்போய்புகுந்து
காரிழையாள்மாது கலந்தாரிநாயகமே
அத்திபுரம்நகருக் காதினத்துக்குடையவளே
தான்பிறந்தநாட்டுக்கு தானேயதிபதியாய்
முத்துநெடுநாடு முழுதாமுடையவளே
மங்கையரேயும்முடைய மைத்துனனார்வந்ததுகாண்
காசிலிவர்னர் கர்னர்திருமகனார்
மாலைமுடியழகர் மண்டபத்தில்வந்திறங்கி
அழைத்துவரச்சொன்னா ரன்பானமைத்துனனார்
சொல்லுகற்குமுன்னமே தோகையெழுந்திருந்து
பூவணையைவிட்டு பூங்கிளியுந்தானிறங்கி
தாரார்குழலியுடையாள் தாதிகள்தோளூன்றி
காரிழைமார்தாதிகள் கைலாகுதான்கொடுக்க
மெத்தனவேதானடந்து வேல்புருவங்கண்ணாளும்
மைத்துனனார்வந்திருக்கும் மண்டபம்போய்புகுந்தாள்
மாலைமுடியானும் மதனிவரவுகண்டு
சிங்காதனத்தைவிட்டு திகழக்குதித்திறங்கி
மதனியார்பாதமலர் தாவிதெண்டனிட்டான்
வந்துபணிந்தவரை வாழ்த்தியந்தமங்கையரும்
கன்னியர்கள்மாலை கடுகிமணப்பெருவீர்

வாழ்ந்திடுவீரென்று மனங்குளிரவாழ்த்தினாள்
இட்டதோராசினத்தில் ஏறுமல்தானிருந்தான்
கலந்தாரிசொல்வது.

அப்போ-காரிழையாள்மாது கலந்தாரியேதுரைப்பாள்
மைத்துனருநீருமிங்கே வந்தகருமமென்ன
மாலைக்குழலியரே மதனியரேநீர்கேளீர்
மதுரைப்பெருமானும் வந்ததுமில்லையென்று
தீயைவளர்த்தினார் தேசத்தழகுமன்னன்
வானமட்டும்தீய்கள் வளர்ந்ததுகாணங்நேரம்
ஆனைக்குழிகலயம் அக்கினியும்வளருகுது
அக்சினியில்தள்ளவும் அழைத்துவரச்சொன்னாரே
ஆதலாலிங்குவந்தேன் அன்னக்கிளிமதனியென்றான்
அவ்வசனங்கேட்டு அல்லிமருமகளும்
கட்டார்கருங்குழலாள் கலந்தாரியேதுசொல்வாள்
சீறியெறிபறந்து செங்கையற்கண்முத்தரும்பி
அல்லிமருமகளை அக்கினியில்தள்ளிவிட்டு
ஆள்வாரோபின்னிருந்து அத்திநகர்பட்டணத்தை
அறியேனோநானும் ஐவரதுசேவகத்தை
ஆணழகுமன்ன னருச்சுனராசதுரை
மதுரைதுரைச்சியரை மணமாலைசூட்டவென்று
பூமியைவலமாக வருகின்றவேளையிலே
காசொன்றுநேராத காளையந்தவருச்சுனனார்
தாலியும்நேராத தார்வேந்தரந்நேரம்
மாதுகருங்குழலை மன்னவர்மாலையிட்டு
தேவேந்திரன்பட்டம் தேர்விசையராண்டாரே
அப்படியல்லவோ ஐவரதுசேவகங்கள
காலங்கள்பின்பலவோ கபடர்கள்நூற்றுவர்க்கும்
ஏதுக்குதள்ளுகிறான் என்னைப்பெருந்தீயில்
என்னையிவன்தள்ள இவன்யாருநானாரு
யார்காணுமென்னை அக்கினியிற்றள்ளுறவன்
காவலர்கள்பாண்டவர்கள் காடுறைந்துபோனவர்கள்
என்-மாமன்மாரெல்லோரும் வனவாசம்போனாரே
என்-மாமிதுகில்விரிக்க வனவாசம்போனாளே
நான்-ஏற்றக்குறைச்சல் இளப்பாய்தானடந்தால்
அவர்களுளவரியாரோ ஐவர்சிகாமணிகள்
எனக்குசித்தமொருபட்டுடுத்தி நேரமொருபூச்சாத்தி
போதமொருபட்டுடுத்தி பொற்சரிகைப்பணிபூட்டி
மாரணிபின்மேலே வளர்த்தாரேமன்னவனார்
நான்-ஏற்றகுறைச்சல் இருந்தேனேயாமானால்
அவர்களறியாரோ அதிகர்ணவீரியனே
அதுயில்லாதிருந்ததினால் ஆனந்தவாழ்மார்பா

வாசலுக்குகாவலாய் மைத்துனரேநீரிருந்தீர்
என்னை இவன்தள்ள யிவனாலேதானுமோ
தக்கபுகழுடைய தருமாதுதம்பியர்கள்
பதினெட்டுநாள்பாரதம் படையெடுத்துவந்தாக்கால்
நூலாஸ்கடுந்திரளார் நூற்றுவர்கள்பூமுடியும்
வீமர்கைதண்டாலுமே விசையர்கையும்போலும்
நாமக்குலவிளக்கு நகுலர்கைபாங்கினாலும்
சகாதேவர்கையிலிருக்கும் சக்காத்துவாளினாலும்
துண்டுதுண்டாகவே துணிக்கின்றபோதையிலே
கூறுகூறாகவே குவிக்கிறபோதையிலே
பிணத்தின்மேல்தானடந்து பெண்கள்மாரெல்லோரும்
நாளை-தலைமேலே கையைவைத்து தானழுகுமாதர்களை
தம்பிமார்பெண்களை தள்ளாதேசொல்லுமென்றான்

கர்னன் புத்திரன் சொல்வது.

அவ்வார்த்தைகேட்டு அங்காரயன்புத்திரனும்
நாளை-துண்டுதுண்டாக துணிக்கிறேபேறானாலும்
அரவக்கொடிவேந்தன் அஞ்சாதொருநாளும்
மாலைக்குழலியரே மதனியரேசேளீர்
எங்களையல்லாமல் எழில்நாகங்கொண்டோனும்
உம்மை-தன்னுகைக்குவந்தாலே தருமமுடியோனும்
என்னசொல்வீர்மதனி என்றுமேமன்னவரும்
நான்சொல்லவரியேனே சுந்தரப்பூமுடியே
எதிரேயுத்தாஞ்சொல்லி எடுத்துரைக்கமாட்டேனே
அஞ்சவேனோசொல்லுதற்கு ஆனந்தவாழ்மார்பா
ஆர்காணுமென்னை அக்கினியிற்றள்ளுதற்கு
தம்பிமார்பெண்டுகளை தள்ளுமென்றுசொல்லுதற்கு
அதற்குநானஞ்சவேனோ ஆணழகாவீரியனே
அவ்வார்த்தைகேட்டு அங்காரயாபுத்திரனும்
மாலைக்குழலேயுன் மனதைநான்சோதித்தான்
எதுக்குமஞ்சாதே இருமென்றுதானுரைத்தார்
அஞ்சகையேன்காணும் ஆனந்தவாழ்மார்பா
ஒன்றுரெண்டில்லையோ உத்தமர்கள்வீரியமே
ஐந்துஅடையாளம் ஆணழகர்தான்கொடுத்து
வாசலுக்குக்காவலாய் மைத்துனரேநீரிருக்க
அஞ்சேதொருநாளும் ஆரணங்குயென்றுரைத்தாள்

கர்ணர்புத்திரன் தூதனுக்குச்சொல்வது.

ஏலக்குழலியரே இருமென்றுதானுரைத்து
அப்போத்தூதுவனும் இவ்விடத்தில்நின்றிருந்தான்
வந்ததொருதூதுவனை மன்னவனுந்தானழைத்து
அஞ்சிக்கையாகயிங்கே அல்லோருநாமிருக்க

அவளஞ்சவில்லைகாணும் அதிசயப்பேசுகிறாள்
அவ்வார்த்தைசொல்லி அறிக்கையிடவந்தேனென்றார்
அவ்வார்த்தைசொல்லுமென்று அனுப்பிவிட்டு தூதுவனை
காவலிலேதானிருந்தான் கட்டழகனப்போது
அப்போதுதூதுவனும் அட்சணமேவந்துவிட்டான்

துரியோதிரன் வேதியரை யழையுமென்றது.

தேசத்தழகுமன்னன் துரியோதிரன்கேட்டு
கண்கள்சிவந்து கடுங்கோபந்தானாகி
காசிலிவர்னர் கர்னரைதானழைத்து
வேதியர்கள்பெரியோரை வேந்தனேயழையுமென்றார்
சாஸ்திரவாதிகளைச் சகலகலையழையுமென்றான்
வேதந்தெரிந்தவரை வேதியரையழையுமென்றான்
அவ்வசனங்கேட்டு அதிகர்னர்தானெழுந்து
அரசன்சொல்கடவாமல் அந்தணரைத்தேடுகிறார்

பெருமாள் வருகிறது.

அந்தவொருவேளையிலே ஆபரவரறிந்தார்
அண்டமளந்தவொரு ஆதிநாராயணரும்
இதுதான்சமயமென்று எம்பெருமாளேதுசெய்வார்
நல்லசனமென்று எம்பெருமாளேதுசெய்வார்
சாஸ்திரந்தானறிந்து சதுர்மறைபோலாக
அறுபத்துநான்குகலை யாவுமுணர்ந்தவர்போல்
வேதங்களைகண்ட வேதியர்போல்வடிவெடுத்து
மெத்தப்பெரியவராய் மேல்நாட்டுவேதியராய்
விருத்தக்கிழவராய்த் வெகுநாளாவாழ்பவராய்
தீரப்படித்தவராய்த் தெளிவறிந்தவேதியர்போல்
முற்றுமேகற்றவராய் முழுதுமறிந்தவராய்
தெண்டுபவுத்திரமும் திருமார்பிற் பூநூலும்
தள்ளாதவேதியர்போல் தடியூன்றிவாராரும்
வாரவொருவேதியரை மன்னவனுந்தான்பார்த்தான்
எதிர்கொண்டுதெண்டனிட்டார் யியலான அதிகருணர்
தெண்டனிட்டகர்னரை சீர்பெறவேதான்வாழ்த்தி
வாழ்த்திவிடைகொடுதது மறையவனரேதுரைப்பார்
அஞ்சாதேகர்னரே ஆதிமூலமாயவனார்
இவ்வேஷங்கொண்டு இவ்விடத்திவநதேன்யான்
கலக்கமனமுடைய கபடன்துரியனுக்கு
ஆறு்தஞ்சொல்லவந்தேன் அறிவழிந்தமன்னனுக்கு
ஆனதினால் நீர் அஞ்சவேண்டாம்ராசமன்னா
மதுரைத்துரைச்சியவள் வளநாடுபுத்திரனும்
தன்தேவியண்டைவந்து தாமருவியிவன்போனான்
அடையாளமுந்தந்து அணழகாதான்போனான்
உன்மீதுசிந்தனைகள் வும்மைசொல்லும்மன்னனுக்குப்

சிந்தைகலங்கவே தெரிவிப்பேன்கபடனுக்கு
அந்நாளேகவாருமென்று அந்தணர்சொல்லுகையில்
கர்னராதுகேட்டு கண்கள்களிகூர்ந்து
ஆனந்தங்கொண்டு அடிவணங்கித்தெண்டனிட்டு
கைலாகுதான்கொடுத்துக் கர்னரவர்கூட்டிவந்தார்

அரியோதிரன்வேதியரைக் கண்டுமரியாதைசெய்தது.

பானுகங்கொண்ட மன்னன்கொலுமுகத்தில்
அந்தணர்வருகையிலே அரவக்கொடிவேந்தன்
தெண்டனிட்டுவேதியர்க்குச் சிங்காதனங்கொடுத்தான்
குந்தினார்வேதியரும் கொலுமண்டபத்தில்
மற்றதொருமன்னவர்கள் மகுடமுடிராசாக்கள்
ஏகமாய்நிறைந்தார்கள் எங்குமிடமில்லாமல்
அப்போதுவேதியரும் அரசன்முகம்பார்த்து
எம்மையழைத்தது ஏதுவகைசொல்லுமென்றார்
உம்மையழைத்தவகை ஒன்றுக்குறையுமில்லை
அல்லிமருமகளை அக்கினியிற்றள்ளுதற்கு
நாளுமதுநல்லதாய் நாட்கள்சொல்லுமென்றான்

வேதியர் ஆருடஞ்சொல்வது.

கண்டாரேவேதியரும் [illegible]
கூறுவார்வேதியருங் கொடிநாகமன்னனுக்கு
அரசற்குத்தக்கபடி ஆயாருளலுற்றார்
அஸ்தநட்சத்திரம் ஆகாதேநாளாச்சே
கேட்டையும்மூலம் கெடுதிநாள்வந்ததுவே
ஐந்தாறுநாளைக்கு ஆகாதநாளாச்சே
இன்றெட்டாநாளையிலே எந்திழையைத்தள்ளிடலாம்
ஒருநாளும்பொசுக்கிவிட ஆக்கினைக்குக்குறையுமில்லை
அக்கினியிற்றள்ளவென்றால் அதற்குநடமல்ல
ஆற்றங்கரையோரம் அக்கினியைத்தான்வளர்த்தி
காட்டுமொருவாராய் வழிநெருப்புமூட்டி
ஆகாதமட்டும் அடர்ந்துஎரியவிட்டு
பசுவின்நெய்யிலே படவெரியவிட்டு
தவியாமல்விட்டுத் தார்வேந்தர்காத்திருந்து
அன்றுடம்பிராமணர்க்கு வஸ்திரதனங்கொடுத்து
கோதானம்பூதானம் கொடுத்துவரவேதியற்கு
யானைகுதிரைபசு அபாரியாய்த்தான்கொடுத்து
எட்டுநாள்சென்றபின்பு ஏந்திழையைத்தள்ளிவிடும்
அதனுடனேதோஷம் அபகரித்துப்போய்விடும்
எட்டாநாளிந்நேரம் இவ்விடத்தில்யான்வருவேன்
கூடியிருந்துதள்ளிடுவோம் கொற்றவனேயென்றாராம்
அவ்வார்த்தைதான்கேட்டு அரவக்கொடிவேந்தன்

பூரித்திருதோளும் பொன்னங்கிதான்சுழலத்
சந்தோஷங்கொண்டு சரீரங்கள்பூரித்தான்
வேதியரைப்பார்த்து தேந்தமெனடுத்துரைப்பான்
இன்றெட்டுநாளையிலே இங்குவாரும்வேதியரே
என்றுமிவனுரைக்க ஏதுசொல்வார்யாயவனூர்
அப்படியேயாகுமென்று ஆயரவர்தாணடந்தார்

பெருமாள் அல்லியிடம்வருவது.

காடுசெடிகடந்து கரியமலைதான்கடந்து
ஆறுசுனைதாண்டி அதிகவனந்தாண்டி
வேங்கையடர்ந்தவனம் வெண்களாப்பூத்தவனம்
கோங்குபெருத்தவனம் கொன்றைகளாப்பூத்தவனம்
சந்திரர்சூரியர் காணுவனங்கடந்தார்
வாணுமதுரையது வடமதுரைதாண்டிவந்தார்
சேணுமதுரையது தென்மதுரைநாடிவந்தார்
அல்லியரசாணியது அரண்மனையில்வந்துவிட்டார்
பிரவாமுடிதரித்த பெண்பெருமாள்நாயகியும்
கண்டாளேவேதியர்க் கன்னியிளமயிலாள்
வேதியரைக்கண்டவுடன் மெல்லியருந்தெண்டனிட
தெண்டனிட்டுயல்லி செப்புவாளொருவார்த்தை
ஐயாபெரியவரே அறிவுள்ளவேதியரே
தீரப்படித்தவரே தெளிவறிந்தவேதியரே
எந்தவூரெந்ததேசம் எங்கிருந்திங்குவந்தீர்
சொல்லுமையாவேதியரே என்றுரைமேதோகையரும்
தூரம்வடக்கேயம்மா துவாரகாபுரிதேசம்
அத்திபுரத்திற்கு ஆரணங்கேயான்போக
வழிகள்தெரியவில்லை மாதாவேயெந்தனுக்கு
தேசத்தழகுமன்னன் திரியோதிரப்பெருமாள்
வீஷ்மர்துரோணர் விதுரனஸ்வத்தாமன்
கர்னருங்காங்கையரும் கனத்தமெதாருமெல்லியனும்
சிந்துபதிராசனவா துற்சாதனமன்னன்
தம்பிமார்தொண்ணூற்று ஒன்பதுபேராசாவாம்
அவர்கள்ஏகாந்தமாய்க்கூடி இராசமன்னமெல்லாரும்
யாரோவோர்கன்னியாம் அவள்பேர்கலந்தாரி
தேன்மொழியாள்வயிற்றில் திருட்டுப்பிள்ளையுண்டாச்சு
ஆகையால்கன்னியரை அக்கினியில்தள்ளுதற்கு
கோதானம்பூதானம் கொடுக்கிறார்வேதியற்கு
வழிகள்தெரியவில்லை மாதாவேநான்போக
உந்தனைக்கேட்டுப்போக வந்தேன்காணுத்தமியே
என்றுமிவனுரைக்க ஏந்திழையுங்கண்சிவந்து
சீறியெறிபறந்து செங்கையர்காண்முத்தரும்பி
ஆரடாகாவலரே அகங்காரமல்லர்களே

அதுசமயம்நீர்பார்த்து அனுப்பிவிடுந்தாதிகளை
ஆயுதங்களைகொடுத்து அனுப்பிவிடுதாதிகளை
சேனைகளையெல்லாஞ் சிதறவடித்துவிடு
அப்படியேநல்லதென்று அல்லியருந்தானிருந்தாள்

வேதியர் அத்திபுரம் வந்துசேர்ந்தது.

அடியளந்தயெம்பெருமாள் ஆதிமூலமாயவரும்
மதுராபுரிகடந்து வையவளநாடுமிட்டு
காடுசெடிகடந்து காறுதான் துலைத்து
பொல்லாவனங்கடந்து போய்சேர்ந்தாரத்திபுரம்
தேசத்தழகுமன்னன் துரியோதனனிடத்தில்
வந்துவிட்டார்வேதியரும் மாபாவியப்பலத்தில்

துரியோதிரன்சொல்வது.

கண்டானேவேதியனை கபடன்துரியோதனன்
ஐயாபெரியவரே அன்பானவேதியரே
முப்பத்திரண்டறமுஞ் செய்தேன்காண்வேதியரே
யானைகுதிரை அபாரியாய்நான்கொடுத்தேன்
கோதானம் கொடுத்தேன்வேதியரே
ஆற்றங்கரையோரமது அக்கினியைவளர்த்திவிட்டேன்
எட்டுநாளாகவே எரிகிறதேஅக்கினிதான்
இன்றேடேகெடுவாச்சு எழிலானதேவியரே
ஆச்சுதுகாளென்றான் அரவக்கொடிவேந்தன்
அட்சணமாயவனும் அவன்சேதிதான்கேட்டு
சதியாச்சுமன்னவனே தனஞ்செயனேராசேந்திரா
உன்-மனதுபடிசெய்ய ஆறு மறையவனுரைக்கையிலே

துரியோதிரன்கர்னனை யழைத்துச்சொல்வது.

தேசத்தழகுமன்னன் திரியோதிரப்பெருமான்
ஆரடாதூதுவரே அழையடாகர்னனைத்தான்
அவ்வசனங்கேட்டு அத்தூதனோடிவந்து
காசிலிவர்னர் கர்னனைத்தானழைக்க
அம்பலக்கச்சேரி அதிகர்னர்வந்துநின்றார்
கர்னனைத்தான்பார்த்து கபடனதுசொல்வான்
கேளுங்காண்கர்னரே செடுவுஞ்செரியாச்சு
தாரார்குழலேதன் தனலுக்கழையுமென்றான்
கடுதவ்ரவுமழையும் கலந்தாரிநாயகத்தை
என்றுமவ துன்ரக்க எங்கமனத்தளர்ந்தான்
வேதியனைக்கண்டார் வேந்தனதிகருணர்
கண்சைக்ககாட்டினர் காரியமாலெப்பெருமான்

கர்னர்கலந்தாரிபிடம்வருகிறது.

அந்தநேருகண்சிமிட்டடை அதிகர்னர்தான்பார்த்து

காரிழையாள்மாது கலந்தாரியேதுசொல்வாள்
அழுதழுதொருபெண்டுகளை ஆரணங்குகையமர்த்தி
கேளுங்கள்தாதிகளே கிளிமொழியாளென்வசனம்
கணவன்றனைச்சேர்ந்த கன்னியருமெய்யானல்
சோரத்தனமில்லாமல் சுந்தரனேநிஜமானல்
தீக்குழிக்குத்தப்புவேன் திசையெட்டுந்தானறிய
அக்கினிக்குத்தப்புவேன் அஷ்டதிசைதானறிய
இதுதானேஎன்னுடைய இருதயத்திதிண்ணயங்கள்
எல்லோருமறியுமட்டு ஏந்திழையாள்செய்தகுற்றம்
என்று-ஆற்றினள்தாதியரை அல்லிமருமகளும்
ஸ்தானங்கள்செய்து செபதபங்கள்தான்முடித்து
சொக்கரைதானினைந்து திருநீருதானணிந்து
மஞ்சள்துயிலுடுத்தி மடியில்வைத்தஉடையாளம்
கோடாலிமுடிச்சிபிட்டு குடமல்லிதானணிந்து
சிரணநெற்றியிலே திலதங்கள்தானுமிட்டு
பட்டுடுத்திபணிபூண்டு பதுமைபோலலங்கரித்து
தோழிமார்கூட்டரு சுற்றிலும்நெருங்கிவர
தாதிமார்கூட்டம் தன்னைநெருங்கிவர
மன்னன்திருகருணர் மன்னன்படைநெருங்க
காவலர்படைகளது கன்னிபலைநெருங்கிவர
அடைகளிருபுரமும் கொம்பனையைநெருங்கிவர
புலவர்படைபெண்கள் பைங்கிளியைநெருங்கிவர

### தீக்குழிக்குவருகிறது.

கோட்டைவிடுக்க கொம்பனையாள்வெளியாளுல்
சந்திரனைக்காணுத தையல்வெளிப்பட்டாளாம்
சூரியனைக்காணுத தோகைவெளிப்பட்டாளாம்
கால்பீலிகலகலென்ன கைவளையல்பளபளென்ன
நெற்றிசுற்றிமின்னிலங்க நீலவிழிமைதுலங்க
கோட்டைகடந்து கொத்தளமுந்தான்தாண்டி
அம்மைக்கரையோரம் ஆரணங்குவருகையிலே
ஏறிட்டுப்பார்த்தார்கள் எங்கும்மகாசெனங்கள்
கங்கைகரைகொள்ளாதே கனமானசேனைத்திரள்
எங்கெங்கும் [illegible] இருந்திருப்பார் எள்ளுவிழபிடமுமில்லை
அக்கினிபெருந்தணலும் ஆவிகள்பொருக்கிலையோ
மெத்தப்பயந்தாள் மேனிகருக்கிவிட
[illegible]கைபடல்கள்புகுது பூமிகள்தெரியவில்லை
அக்கினிசுடராலே ஆறமுடிகூடவில்லை
தவித்துதிக்பாகுது தண்மெலன்றபெருஞ்சுடரால்
அக்கினிச்சுடராலே அருந்தாரகராநெடுத்து

ஏனம்மாவென்று ஏந்திழையாள்வந்துநின்றாள்
சிங்காரஞ்செய்தாள் செங்கமலத்தாதியரை
மகுடமுடிசூட்டி மதாணிப்பதக்கமிட்டு
வச்சிரக்கபாயணிந்து மாணிக்கமாலையிட்டு
காவலிலேவிருந்துகட்டி கண்டாமணிதரித்து
ஆழியுஞ்செங்கோலும் அவள்கையில்தான்கொடுத்து
பாண்டியவள்வாளும் பரிசைகளுந்தான்கொடுத்து
மூதாரிகையிலிட்டு மூதுகிலேட்டாலணிந்து
அல்லியரைப்போலே அவளையலங்கரித்து
அஞ்சாதேபெண்ணரசே அல்லியரும்நானென்று
என்பெயரைநீதரித்து தட்சணமேநீபோயி
ஆரடாயென்மருமகளை அக்கினியிற்றள்ளுபவன்
எவரடாமருமகளை இத்தீயிற்றள்ளுபவன்
கொடுக்கிறேன்பூசை குடுமிதலையுருள
அதிகாரிநானிருக்க ஆரடாதள்ளுபவன்
இந்தப்படியாக எச்சரித்துநீபோயி
அந்தப்படியா அவன்படையில்போய்விழுந்தாள்
அசட்டையாய்நிற்பாள் அல்லியிவளென்று
அடையாளந்தான்கொடுத்து அல்லித்திருமகளார்
சேர்ந்துயிருந்ததுவுஞ் திருவாழிகொடுத்ததுவும்
வந்ததுவும்போனதுவும் வயணமாய்நீயுரைத்து
காரிழையாள்மாலு கலந்தாரிநாயகிக்கு
கைதாங்கியழைத்துப்போய் கன்னியிடகோட்டையில்
அரண்மனையிற்கொண்டுபோய் ஆரணங்குபெண்மயிலை
மசக்கைகள்தீர்த்து மனதைமகிழவைத்து
இந்நஞ்சிலநா ளேந்திழையேசென்றபின்பு
பாண்டவர்கள்வந்து பசியமர்ந்தபிற்பாடு
வெற்றிமதயானை வீமரதுதெண்டாலே
நூற்றுவர்பூமுடியை நொடியில்துணிந்தபின்பு
அழைத்துக்கொண்டுபோறோம் மஞ்சாதேஎன்றுசொல்லி
தேருதலைசொல்லி செங்கமலம்வாருமென்றாள்

செங்கமலம்வருகிறது.

அப்படியேநல்லதென்று அரிவையிவள்சொல்லையிலே
பயணங்களானால் பைங்கிளியாள்செங்கமலம்
கூட்டியிருப்பதுபோல் கொம்பனைமார்சேர்ந்தார்கள்
ஆயுத[illegible]ன் அநேகம்பேர்துணையானார்
[illegible]ங்களும்பல்லக்கும் பரிசைகளுங்கத்திகளும்
[illegible]டிகளும்அம்புகளும் எதிரத்துகுலங்களும்

வீணைதடியும்சக்கரமும் மங்கையர்கைபிடித்து
இவ்வளவுபேர்களையும் எந்திழைக்குத்துணையாக்கி
மருமகட்குதானுகந்த வரிசைகளுந்தான்கொடுத்து
மேளமும்பேரிகையும் விருதுகளுந்தான்கொடுத்து
ஆற்றிலேதெப்பங்கட்டி அதின்பேரில்தானேற்றி
போய்வாருமென்று பொற்கொடியுமனுப்பிவைத்தார்
தெப்பமதின்மேல் தேன்மொழியார்தானேறி
சகலவிருதுடனே தையலர்கள்வாறார்கள்
கரைபுரண்டவெள்ளம் கனத்தாறுமுன்னேட
அந்தச்சமயத்தில் அச்சுதரும்பார்த்திருந்தார்

கலந்தாரிதீயைச்சுற்றிவருவது.

அக்கினியில்வந்துநின்றாள் அரிவைகலந்தாரி
சுற்றிவரச்சொன்னார்கள் தோகையிளமயிலே
தீயிலேபோய்க்குளித்து தையலரும்சுற்றிவந்தாள்
தன்னுடனேமுன்றீயில் சுற்றக்கொடிவேந்தன்
விழப்போகுஞ்சமயத்தில் வெள்ளம்புரண்டதுவே

ஆறுபெருகி அக்கினியைத்தணித்தது.

ஆயர்கிருபையினால் ஆறுபுரண்டதுவே
ஆகாயகெங்கை அலைமோதிவந்ததுவே
புரண்டோடிவெள்ளம் பெருந்தணலில்விழுந்ததுவே
அக்கினித்தணிந்தது ஆறுவெள்ளம்போனதுதான்
பட்டதேவெள்ளம் பார்மன்னர்மீதிலேதான்
சிலபேர்மிதந்தார்கள் சிலபேர்முழுகினார்கள்
வேடிக்கைபார்த்தவர் மிதக்கிறார்வையிலே
உயிரிழந்துபோனவரும் ஓடியேபோனவரும்
கரையேறிப்போனவரும் தாவொட்டப்பிடித்தவரும்
சிதறிவிழுவாரும் சிவனுயிர்போனவரும்
அலறிவிழுந்தவரும் அக்கரையேபோனவரும்
திக்குத்தெரியாமல் திசைக்கெட்டுப்போனவரும்
அறியாமல்வந்தோம் ஆற்றுக்கிரையாக
தெரியாமல்வந்தோம் சிவன்பரிகொடுக்க
ஒருவர்கள்போனவரும் ஒருவருக்குந்தெரியாமல்
மூலைக்குமூலை முறிந்துகெட்டுஓடுகிறார்
அரிவைகலந்தாரி அசையாப்பதுமைப்போல்
ஆயன்கிருபையினால் அவ்விடத்தில்தானிருந்தாள்
கைக்குவித்தபடியாக கன்னியருந்தானிருந்தாள்
ஆறுபெருகிசலம் அவனைச்சுற்றிஓடுதாம்
கர்னரும்நின்றிருந்தார் கனத்தபெருவாற்றில்

மற்றவர்களெல்லாம் மாண்டதுபிழைத்ததுவும்
மூர்ச்சைகளானதுவும் மெய்மறந்துபோனவரும்
வயிறுபெருத்தவரும் மண்மேல்விழுந்தவரும்
களைபட்டுபோனவரும் கண்பிதிங்கிப்போனவரும்
திகிலடைந்துப்போனவர்கள் திசைமாறியோடுகிறார்

### மதுரைப்பெண்கள்வந்துநெருங்கினது.

அந்தச்சமயத்தில் ஆற்றங்கரையோரம்
பெண்டுகள்படைநெருங்க பேரிகைவாத்தியங்கள்
முரசுகளடிபடவே முறையிட்டபேரிகைகள்
டங்காரமுழங்கவுந் தவுண்டுமெல்லாரிகொட்ட
சற்சரிகைவீணைகளுந் தாக்கிமுறைசரைய
அடிபடுதுராயபேரி அடிவானத்திடிபோல
கோடைகாலத்திடிபோலே குமுறுதேபேரிகைகள்
சமுத்திரகோஷ்டம்போல் தணிமதுரைப்பெண்களெல்லாம்
ஆரடாயென்னுடைய அருமைமருமகனை
இந்திரனார்தேவிபரை என்னுடையகண்மணியை
துன்னுங்கருங்குழலை தோகையிளமயிலை
என்னுருயிருயிருக்க என்னுடையகண்மணியை
ஆசைமருமகனை அக்கினியிற்றள்ளுபவன்
அவன்-ஆண்மையும்வீரியமும் அறிகிறேன்பாரென்று
தெப்பமரத்தைவிட்டு தேன்பொழிமார்தானிறங்கி
படைகளுடனேபெண்கள் பதறிவிழுந்தார்கள்
ஓடுகிறசெனங்களை ஒருமிக்கத்துரத்துகிறார்
கொக்குத்திரளிலே இராசாளிபுகுந்ததுபோல்
புலியினதுகூட்டத்தில் போய்விழுந்தசிங்கம்போல்
வந்துவிழுந்து மாட்டுகிறார்பெண்களெல்லாம்
யானைபடைக்கஞ்சாதே அல்லியின்றன்தாதியர்கள்
பாலாவும்பரிசைகளும் பாங்குபிடிகளும்
ஈட்டிசுழட்டுவது எகிறிக்குதிப்பதுவும்
பாலாதிருப்புவதும் படையிலேயோதுவதும்
பாங்குசுழட்டுவதும் பக்கத்தில்குத்துவதும்
கத்திசுழட்டுவதும் கவ்விவிழுவதுவும்
சிறுத்தைப்போலாட்டுவதும் சேரவந்துகுத்துவதும்
எகிறிக்குதிக்கிறதும் எச்சரித்துமாட்டுவதும்
இ[illegible]யாக இசைந்துமேசேனையெல்லாம்
பய[illegible]முறிந்ததேசேனையெல்லாம்
இ[illegible]ன்னவதிசயம் இவர்கள்யார்பெண்படைகள்
[illegible]ரசியவள் மயிலணையாள்வந்துவிட்டாள்
[illegible]ழக்கப்போமோ இவள்கையில்தப்புவமோ
[illegible]காபெண்ணரசு மதியாளொருவரையும்.

இன்றைக்கிருக்கிறோமே இவள் கையில்மாண்டிடுவோம்
தாக்ஷண்யமென்றேளே தயவுடன்பாராளே
எப்படியென்றுசொல்லி இரடிவிழுவாரும்
காலிரடிவிழுவாரும் கைசோர்ந்துவிழுவாரும்
ஆயுதத்தால்காயப்பட்டும் அலறிவிழுவாராம்
ஆற்றுக்குத்தப்பியே ஆருயிர்பிழைத்துவந்தோம்
கூற்றுவன்போலே கொள்ளவந்தார்பெண்களென்று
பல்லைத்திறப்பார்கள் படுக்கையாய்விழுவார்கள்
முன்னேறுகிறவன் பின்னேமுட்டுவாளிவன்றலையை
ஓடிநின்றுபார்ப்பார்கள் ஒருவர்பின்னே நுழைவார்கள்
கால்மாடுதலைமாடாய் கதறிவிழுவார்கள்
இந்தப்படியாக இறைந்தசேனையெல்லாம்
அல்லியைப்போலேவந்து அதிசாரிசெங்கபலம்
மன்னவராய்ப்பார்த்து பாட்டுகிருள்நல்லதெப்பை
சின்னங்களானார் துரியோதரன்படைகள்
அப்போதுமாயவனார் அச்சுதனார்கோபாலர்
அறியாதுபோலே ஆனந்தபாசஜயர்
குன்றிப்புக்கொண்டு கோபாலர்பார்த்திருந்து
அங்குதேசாதிபதி அதிவீரன்கர்னனும்
ஆறுபெருகினதும் அல்லிப்பெண்கள்சொல்கிறதும்
அதிசயம்போலே அதிவீரன்கர்னனும்
கட்டார்கருங்குழலாள் கலந்தாரிநாயகமும்
சிறித்தமுகத்துடனே தென்பொழியும்பார்த்திருந்தாள்
பெண்கள்திறமையைப் புரிப்பார்நகைத்திருந்தாள்
என்னையாசானுப்நாயகிபார் ஆதரிக்கவந்தாரோ
என்றுமனம்பூரித்து எத்திசையும்பார்த்திருந்தாள்

துரியோதிரன் எண்ணமிட்டது,

தேசத்தபுருஷன்னன் துரியோதிரப்பெருமான்
எண்ணுவான்கோடிசிந்தை இராசசபடனவன்
அக்கினிவளர்த்தது அவலமாய்ப்போனதுவும்
வெள்ளம்புரண்டு வெகுபேர்மிதந்ததுவும்
சகிக்கமுடிகொள்ளாமல் தானேவந்ததுவும்
மதுரைப்பட்டப்பெண்கள் வந்துமிகச்சாடுவதும்
வெட்கங்கெட்டுநிற்பதுவும் வேந்தர்களோடினதும்
சின்னங்கள்பட்டதுவுஞ் சேனைகளோடினதும்
விருதாவத்திரவியங்கள் சேனைகளோடினதும்
மங்கைகலந்தாரி மனமகிழ்ந்துநிற்பதுவும்
திரவியம்போனதல்லால் சின்னங்கள்பட்டதுவும்
கிழப்பாப்பான்சொன்ன கெடுதலைவார்த்தைகளும்
அடையாளங்கண்டிருந்தும் அக்கினிவளர்த்தினதும்

இதுகளெல்லாம்பார்த்து ஏங்கிமனங்குன்றி
பெருமூச்சைவிட்டான் பேரான துரியனவன்
குன்றினன் துரியனவன் குருடன்திருமகனார்
அறியாமர்செய்தோம் அல்லிமருமகளே
இடுக்கண்கள்வந்ததுதே இந்திரன்தேவிமால்
மிதமிஞ்சிப்போயிற்றே மெல்லியிவளஞ்சாளே
பாராமற்போனேமே பவுசுகுலைந்ததே
கண்டோர்நகைக்க கனத்தவுடலெடுத்தேன்
பார்த்தோர்நகைக்க பரிகாசமாச்சுதென்று
குறிப்பாகப்பார்த்தான் கோதையர்திருவழகை
அல்லியவளல்ல அதிகாரம்பெற்றுவந்தாள்
அல்லியனுமதியால் அடையாளம்பெற்றுவந்தாள்
முத்திரையுஞ்செங்கோலும் முடியும்தரித்துவந்தாள்
இவள்கையில்மாண்டார்கள் எண்ணத்துலையாது
அவள்வந்தாளாமானால் யார்தப்பப்போறார்கள்
வெள்ளாட்டிகைதனிலே வெட்கங்கள்கெட்டோமே
தாதியவள்கையில் தலையிரக்கமானேமோ
தாதியரைத்தான்வணங்க தலைவிதியோயெந்தனுக்கு
யாரைக்கொண்டுமன்னிப்போம் அநீதமாய்மாளுகுதே

துரியோதனன்கர்னருக்குசொல்வது.

என்றுதிரியோதிரனும் இருதயந்தான்கலங்கி
மன்னர்கருணரை வாவென்றுதானழைத்தான்
கர்னர்பெருமானும் கடுகெனவேவந்துநின்றார்
கர்னாமுகம்நோக்கி கபடனுமேதுசொல்வான்
நீர்சொன்னதுமெய்யாச்சு சூதாய்முடிந்ததுகாண்
அடையாளக்குறிப்பைநான் ஆராய்ந்துபார்க்காமல்
வீண்பழியுன்மீதில் விருதாவாய்ச்சுமத்திவைத்தேன்
இப்போ-அல்லிமுடிதரித்து ஆழிசெங்கோல்கைபிடித்து
அடையாளம்தன்னுடனே அதிகாரம்பெற்றுவந்தாள்
இப்போதெரிந்தது இந்திரனார்வந்தாரென்று
விருதாவாய்ப்பெண்கள் வீணாகச்சொல்லுகிறார்
என்னமக்குபழிபாவம் ஏந்திழையார்தன்னுடனே
வந்தவொருபெண்களுக்கு வயணமாய்நீருரைத்து
சமாதா[illegible]ய்து சாந்தகுணமாத்தி
[illegible]புகளையடக்கி கொம்பனைமார்தன்னுடனே
பயண[illegible] அரிவையர்கள்தன்னுடனே
இட்டி[illegible] கோட்டையிலேகொன்றுசென்று
ஆயுத[illegible]புகுந்துதான்செய்து
[illegible]ராங்கிச்சபடிக்கி அ[illegible]புடனேசெய்து
[illegible]டிக்கும் சீர்கர்னரையன்னவரே

போவென்றுசொல்லி போர்வேந்தன் தானடந்தார்

கர்னர்பெண்டுகளைக்கண்டது.

அப்போதுகர்னர் அதிகமனமகிழ்ந்து
அச்சுதாண்டையில் அறிக்கையிட்டார்கர்னவரவர்
இருவருங்கூடி எதிர்த்துவந்தபெண்கள்முன்னே
வந்தெதிரேகின்றார்கள் மங்கையர்கள்முன்னாலே
எதிட்டுப்பார்த்தார்கள் ஏந்திழையாள் தாதியவள்
மறையவர்கர்னருக்கு வணங்கியேதான்தொழுதாள்
பொருப்பொறுப்கோபங்கள் பொற்கொடியேயாதரசே
பட்டால்தெரியும் பாரகுணமில்லாதார்
கெட்டாலதெரியும் கேடுகெட்டான்னவனுக்கு
அடையாளந்தெரியாமல் யாரோயெவரோவென்று
தெரியாமல்செய்தான் திரியோதனப்பெருமான்
ஆழிக்குஞ்செங்கோற்குங் அதற்காகப்பொருத்தருளும்
மாருங்கள்தாதியென்று மன்னவர்கள் தானழைக்க
கோபந்தணிந்து கொம்பனையாள்செங்கமலம்
குளிர்ந்தமுகமாகிக் கொம்பனையார் தானடந்தார்
காவருமாயவருங் கட்டழகியாரெல்லோரும்
பூஞ்சிலம்புதன்னுடைய பொற்கொடியாள்கலந்தாரி
பண்டையில்வந்தார்கள் அவைவருமப்போது
ஆயற்குங்கர்னருக்கு படிவணங்கிதான்தொழுதாள்
அடிபணிந்துமங்கையரை ஆயனாதான்வாழ்த்தி
கற்புத்திருத்தவளே கன்னியரேநீர்வாழி
வாழ்த்தினிடைகொடுத்தார் மாயனுநெடும்பெருமாள்
வந்தகொருதாதியுடன் மகுடமுடி தான்பார்த்து
அத்தைமகுடமென்று அடிபணிந்துதெண்டனிட்டாள்
வந்ததொருபெண்களெல்லாம் மயிலேனக்குதெண்டனிட்டார்
அப்போதுசெங்கமலம் அல்லிமருமகளை
நாடாளுங்கன்னியவள் நாயகியாளென்றுசொல்லி
கலந்தாரிநாயகிக்கு கட்டழகிதெண்டனிட்டாள்
செங்கமலதாதியரைச் சீர்பெறவேதான்வாழ்த்தி
ஆலிங்கனஞ்செய்து அல்லிமருமகளும்

கலந்தாரிகோட்டைக்கு அழைத்துவருகிறது.

எல்லோருமாய்கூடி இசைந்துநடந்தார்கள்
கன்னியர்கோட்டைக்கு கடுகநடந்தார்கள்
காவலுக்குள்நுழைந்தார்கள் கலந்தாரிகோட்டையிலே
கர்னர்திருமகனுங் கண்டுதொழுதானும்
எல்லோருங்கூடி ஏந்திழையாள்கோட்டையிலே

உள்ளே நுழைந்தார்கள் உட்கட்டரன்மனையில்
தாயாராந்துற்சடையாள் தையலரும்வந்துவிட்டாள்
பேரால்மிகுந்த பெருந்திருவாள்நாயகமும்
அனைவரும்வந்தார்கள் அன்புடனேவாழ்த்தி
ஆலமெடுத்தார்கள் ஐந்நூறு தாதியர்கள்
திருஷ்டிகழித்தார்கள் செல்வதியான்மங்கையற்கு
அவரவர்களாசனத்தில் அமர்ந்தார்களெல்லவரும்
ஆயன்பெருமாளும் அமர்ந்தார்சிங்காதனத்தில்

### ஸ்ரீமந்தஞ்செய்தது.

மதுரையிலேதானிருந்து வந்தவந்தபெண்களெல்லாம்
ஸ்ரீமந்தஞ்செய்வதற்கு சிந்தையிலேதானெண்ணி
கட்டார்கருங்குழலாள் கன்னியரையலங்கரித்து
பொன்சரிகைசேலையது பூவையரையலங்கரித்து
ஆடையணிந்து ஆபரணமேற்சாத்தி
சாந்துசவ்வாதுகளை சரீரத்தில்தான்பூசி
களபகஸ்தூரிகளை கலந்துமிகப்பூசி
மங்களகரமாக மயிலணையையலங்கரித்து
பேடைமயிலணையாள் பெண்மயிலைகுந்தவைத்து
மாமியார்வரிசையென்று மசக்கைபண்டங்களெல்லாம்
வரிசையுடன்தான்கொடுத்து மயிலணைமாரந்நேரம்
அல்லித்திருமுடியும் அழுத்தியசெங்கோலும்
மோர்பெற்றமுத்திரையும் மொய்குழலாளண்டைவந்து
வந்துபணிந்தார்கள் வளநாடுமங்கையற்கு
பேரிகையறைந்தார்கள் பெரியடங்காதான்முழங்க
மல்லரிதாளம் மத்தந்துளத்தாரி
நாகசுரம்புள்ளாங்குழல் நல்மு[illegible]னதாதுக
ஆலங்கள்தான்சுழட்ட அரிவையிளமங்கையற்கு
சேஷைகள்தானிறைக்க சந்தனப்பொடியிறைக்க
குந்தாணிமேலே கொம்பனையைநிற்கவைத்து
பட்டுதில்றவளர்த்தி பைங்கிளியைகுந்தவைத்து
ஆலஞ்சுழட்டி அட்சதைப்பொட்டுமிட்டு
சாந்துதிலர்தமிட்டுச் சந்தனம்மேற்பூசி
பண்டுபலாதிகள் பழவர்க்கம்சிறுவர்க்கம்
கொஞ்சி[illegible]த்தேனும் குடகுமலைத்தேனும்
[illegible]ரியும் சிவந்தபலாச்சுளையும்
[illegible]ருசியும் மாம்பழமுஞ்சர்க்கரையும்
[illegible]வம் வகையானயினிப்புளிப்பும்
[illegible] கொய்யாக்கனிமுதலாய்
[illegible]பணியாரம் அதிரசந்தோசையுடன்
[illegible]சியாரம் ஆனபசுநெய்யுடனே

ஏற்றியிறக்கி இன்பமுடனுண்ணவைத்து
உண்டுபசியாறி உத்தமையாள்கங்கையரும்
கையலம்பிதானும் களிப்புடனேவாய்துடைத்து
கற்பூரம்தாம்பூலம் கனிவாய்க்குத்தான்கொடுத்து
சந்தனமும்புட்பமும் தையலர்க்குத்தான்கொடுத்தார்
மாயவனும்மன்னவனும் மத்தமதொருபெண்களெல்லாம்
எல்லோரும்பசியாறி இன்பமுடன்தான்பொசித்து
கையலம்பிஎல்லவரும் கருணையுடன்தானமர்ந்தார்
பூசிடுஞ்சந்தனமும் புனுகுசவ்வாதணிந்து
புட்பத்திறைற்செண்டு போதரவேதான்முகந்து
சமுக்காளந்தனிலிருந்து தாம்பூலம்தான்தரித்து
சந்தோஷமாகிச் சகலருமந்நேரம்
சீமந்தமுடிந்தபின்பு சிலவுவிடைவாங்கி
அவரவர்மாளிகைக்கு அனைவோரும்போனார்கள்
காரிழையாள்மாது கலந்தாரிநாயகியும்
மாயனதுசீர்பாதம் வணங்கிநமஸ்கரித்து
வாழ்த்திவிடைகொடுத்து மங்கையிளையயிலே
புத்திரனைப்பெற்று புகழ்பெறவேவாழ்ந்திடுவாய்

பெருமாள்வந்துவிட்டது.

வாழ்விசையன்புத்திரற்கு மனையாளாய்வந்தவளாய்
போகவிடைதாருமென்றார் பெருமாள்நடந்துவிட்டார்
துவராகாபுரிதேடி சுவாமியும்வந்துவிட்டார்
மதுராபுரிபெண்களு மயிலனைமார்தாதிகளும்
சிலதூநாளவ்விடத்தில் தேன்மொழிமாரெல்லவரும்
குளிகுளிக்குநாள்வரைக்கும் கோவையர்கள்தானிருந்தார்
பிள்ளைபெருமளவும் பெண்களெல்லாமங்கிருந்தார்

கலந்தாரிபுத்திரனைப்பெற்றது.

காரிழையாள்மாது கலந்தாரிநாயகியும்
பத்துதிங்களானவுடன் பாலனைப்பெற்றெடுத்தாள்
பாலகன்தான்பெறவே பாண்டியர்கள்தன்மகட்கு
அறிக்கையிட்டார்தூதுவனல் அல்லிமலர்நாயகிக்கு
செல்வம்பிறந்ததென்று சீராட்டுந்தொட்டில்களும்
அன்னவுஞ்சல்தொட்டில்களும் அழகுடனேதானனுப்பி
பாட்டனார்தன்பேரை பாலகற்குத்தான்தறித்து

அனுப்பியேவைத்தாள் அல்லிமலர்குழலாள்
வந்தவொருதொட்டிலிலே பாலனைத்தான்வளர்த்தி
சித்திரவில்பேரனவன் சின்னஅருச்சுனனார்
என்றுதிருநாமம் இட்டாரேபாலனுக்கு
அழகுதானிருந்தான் அல்லிமகனாரும்
மதுராபுரிபெண்கள் மயிலணைமார்யாவர்களும்
அம்மாநீஅஞ்சாதே அரசாளும்பாண்டவர்கள்
காடுறைந்தபாண்டவர்கள் நாடாளவருவார்கள்
ஐவர்வந்தபின்பு அமருவாய்தென்மதுரை
போகவிடைதாருமென்று போற்றியடிபணிய
அப்படியேசம்மதித்து அனுப்பிவிடைகொடுத்து
நடந்தார்கள்தென்மதுரை நாயகிமார்பெண்களெங்கே
தேனுமதுரையது தென்மதுரைதேடிவந்தார்
அல்லிமலர்நாயகிக்கு அடிவணங்கிதெண்டனிட்டாள்
எழுந்திருமென்று ஏந்திழையாள்தான்வாழ்த்த
போனதுவும்வந்ததுவும் புதுமையுஞ்சொன்னார்கள்
கேட்டுமனமகிழ்ந்தாள் கிளிமொழியாளல்லியம்மாள்
காரிழையாள்மாது கலந்தாரிநாயகியும்
புத்திரனைப்பெற்று புகழ்ச்சியாய்வாழ்ந்திருந்தாள்
மாமனதிகர்னர் வரப்பாகத்தானிருந்தார்
விசாரணைசெய்து விசனங்களில்லாமல்
ஆதரித்துதானிருந்தார் அம்மானதிகருணர்
புலந்திரனார்கதையைப் பூதலத்தில்கேட்டவர்கள்
கேட்டவர்கள்யாவர்களும் கீர்த்தியுடன்தான்வாழ்த்த
ஊழிஊழியென்று வுலகத்திலுள்ளவர்கள்
வாழிவாழியென்று வரமளித்தாரீஸ்வரனார்

புலந்திரன்களவுமாலை.

முற்றிற்று.



